# வெற்றிக்கு முதல்படி



டாக்டர் எம்.எஸ். உதயமூர்த்தி

காணிக்கை

எனது வாழ்க்கைத் துணைநலம்
திருமதி சீதாவுக்கு

# படிஏறுமுன் சில வார்த்தைகள்

நீங்கள் வளத்துடன் எல்லா வசதிகளுடனும் வாழப் போகிறீர்கள்.

இவ்வுலகில், எல்லோருடைய தேவைக்கு மேலே எல்லாப் பொருட்களும் இருக்கின்றன. நாம் பிறரை அடித்துத்தான் - ஏமாற்றித்தான் - பிறர் உழைப்பில்தான் - வாழ வேண்டும் என்கிற நியதி இல்லை. கண்களை அகல விரித்துப் பார்க்க கற்றுக் கொள்ள வேண்டும், அவ்வளவுதான். எண்ணற்ற வாய்ப்புக்கள் நம் எதிரே இருக்கின்றன.

நாம் இந்த உலகில் ஏழையாக, இல்லாமையில் கஷ்டப்பட வேண்டுமென்கிற கட்டாயமில்லை. ஏழ்மை கடவுளின் விருப்பமல்ல. நாம்தான் பணம் சம்பாதிப்பது கஷ்டம் என்றும் இப்படியே தான் வாழவேண்டுமென்பது நமது தலையில் எழுதப்பட்ட விதி என்றும் வாழ்கிறோம். மனத்தால் வறியவர்களாகி விட்டோம்; வளர்ப்பால் ஏழ்மையில் ஊறியவர்களாகி விட்டோம். மனம் வறுமையைப் பற்றியே எண்ணி வாடுமானால், வறுமைதான் மிஞ்சும்; வறுமைதான் நம் வாழ்வாக அமையும். ஏனெனில் எப்படி எண்ணுகிறோமோ அப்படித்தான் ஆவோம். எதை எண்ணுகிறோமோ அதுதான் வந்து சேரும்.

நம்மில் பலரிடம் ஆசைப்படுகிற அளவுக்கு, "இறங்கி ஒரு கை பார்ப்பேன்!" என்கிற முனைப்பு இல்லை. துணிவு இல்லை. உழைப்பு இல்லை. இந்த முனைப்பு இருக்கிறதே - தானாக இறங்கி செய்யும் முதல் முயற்சி இருக்கிறதே - அதுதான் திறவுகோல். கையிலே திறவுகோலை வைத்துக்கொண்டு வீட்டைப்

பிறர் வந்து திறக்க வேண்டுமென்று - பிறரை எதிர் பார்ப்பது - பிறரை சார்ந்திருப்பது - என்ன நியாயம்?

இல்லை என்று சொல்பவனைப் பார்த்து பூமித்தாய் நகைக்கிறாளாம். "இந்த உலகில் உனக்காக இவ்வளவையும் படைத்திருக்கிறேன், மகனே! இல்லை என்று சொல்கிறாயே" என்று நம்மைப் பார்த்து சிரிக்கிறாளாம். சொல்கிறார் வள்ளுவர்.

பணம் சம்பாதிப்பது, செல்வம் சேர்ப்பது, பொருளை ஈட்டுவது எல்லாம் பாபமான செயல்கள் என்கிற எண்ணம் சில படித்தவர்களிடையே இருக்கிறது. பணம் பண்ணுவது பாபமல்ல.

தவறான வழிகளில் பணம் பண்ணுவதுதான் பாபம். என்றைக்கு மனிதனுக்கு வயிறு இருக்கிறதோ, பசி இருக்கிறதோ, தாகம் இருக்கிறதோ, குளிருக்கு உடை தேவைப்படுகிறதோ, மழை இடி மின்னலிலிருந்து காப்பாற்றிக் கொள்ள ஒரு வீடு தேவைப்படுகிறதோ அன்றே அவன் அதற்கான வழிகளைப் பார்க்கவும் தேடவும் கடமைப் பட்டிருக்கிறான்.

உடல் என்பது மனம் என்ற அற்புத சாதனத்தை ஏந்தியிருக்கும் ஒரு கோயில். அதை நாம் நன்கு பராமரிக்க வேண்டும். காப்பாற்ற வேண்டும். ஏன்?

இந்த மனத்துக்குள் இருந்து நம்மை வாழ்விக்கும் ஜீவன் இருக்கிறதே அந்த உயிர், அந்த ஆத்மா மேன்மை பெற வாய்ப்புத்தான் வாழ்க்கை. உடல் எடுத்து வாழ்வதன் மூலம்தான் - இங்குள்ள தன்மைகளை - உலகின் இயல்புகளைப் புரிந்து கொள்ள முடியும். வாழ்வதன் மூலம், நாம் உயர, நமக்கு ஒரு வாய்ப்பு கொடுக்கப்பட்டிருக்கிறது.

தற்கொலை செய்து கொள்பவர்களைப் பார்த்து நான் பரிதாபப்படுவதுண்டு. "வாழ்வில் அர்த்தமில்லை, வாழ்ந்து என்ன பயன்? இது ஒரு செக்கு மாட்டு வாழ்க்கை. உண்டு, உறங்கி, போராடி, பிள்ளை குட்டிகளைப் பெற்று வாழும் வாழ்க்கை எதற்காக? இது ஒரு சடங்கு. இப்படி நாம் தள்ளப் பட்டிருக்கிறோம்" என்று தத்துவம் பேசுபவர்களைக் கண்டு நான் அனுதாபப்படுவதுண்டு.

வாழ்க்கை, இந்த ஜீவன் முன்னேறும் ஒரு முயற்சி. அந்த முயற்சியில் இரண்டு பகுதிகள் இருக்கின்றன.

ஒன்று உடல், மற்றது உயிர் எனப்படும் ஆத்மா. எனவே நாம் உடலைப் பேணவும் காப்பாற்றவும், இந்த பொருளைச் சார்ந்த உலகில் வாழ்ந்தாக வேண்டும். பொருள் தேவை.

இரண்டாவதாக உடலுக்கப்பால் ஆத்மா இருக்கிறது. அது குடியிருக்கும் மனம் இருக்கிறது. அந்த ஆத்மா உலக ஞானம் பெற, ஆத்ம ஞானம் பெற, நம்மை நாம் அறிந்துகொள்ள ஒரு வாய்ப்பளிக்கிறது. எந்த மூலத்திலிருந்து நாம் தோன்றினோமோ அந்த மூலத்தை அடைவதுதான் இந்த ஆத்மாவின் - ஜீவனின் - லட்சியம். அந்த லட்சியத்தை அடையும் பாதையில், நாம் நமக்காகவும், பிறருக்காகவும், இந்த சமுதாயத்திற்காகவும் வாழ்வதில் தான் அர்த்தம் இருக்கிறது. ஏனெனில் இப்பிரபஞ்சத்திலுள்ள அனைத்துமே ஒன்றுக்கொன்று உதவியாக படைக்கப் பட்டிருக்கின்றன. எல்லாமே நாம் வாழ உதவுகின்றன. அப்படி இருக்கும்போது மற்றவை வாழ நாம் உதவ வேண்டாமா?

வாழ்வின் மகா பெரிய தத்துவத்தை - ரகசியத்தை உணர்ந்து கொள்வோம்.

இப்பிரபஞ்சத்தில் ஒவ்வொருவருக்கும் ஒரு இடம் - ஒரு பணி - இருக்கிறது. ஒரு காரணத்திற்காகத் தான் பிறந்திருக்கிறோம். நம்மை நாம் அறியும் முயற்சிதான் வாழ்க்கை. நம்முள் ஒரு மகத்தான சக்தி இருக்கிறது. நாம் வெறும் மனித உடல் மட்டுமல்ல. ஒரு மாபெரும் சக்தி நமக்கு உதவ, நமக்கு வழிகாட்ட தயாராயிருக்கிறது. அது நம்முள் இருக்கிறது என்பதை மனிதன் ஒருநாள் இல்லாவிட்டால் ஒருநாள் உணர்வான்.

உங்களிடம் ஒரு அலாவுதினின் அற்புத விளக்கை கொடுக்கிறார்கள். நீங்கள் அதை வைத்துக் கொண்டு எவ்வளவோ செய்யலாம். இன்பமுடன் வாழலாம். நீங்களோ அதை விட்டுவிட்டு "இது ஒரு விளக்கு. இரவு வரும்போது ஏற்றி வைத்தால் வெளிச்சம் கிடைக்கும்'' என்று ஒரு சாதாரண விளக்காய் அதை உபயோகித்தால் என்ன சொல்வார்கள்? வெளிச்சம் தரும் விளக்காகவும் உபயோகப்படுத்தலாம். அதற்கு மேலும் அதைத் தேய்த்தால் அற்புத சக்திகள் கொண்ட மந்திரவாதி வருவான். அவனை நாம் விரும்பியவாறு உபயோகித்துக் கொள்ளலாம் என்று தெரிந்து கொள்ள வேண்டாமா?

எனவே மனத்தின் சக்திகளைக் கொண்டு உங்களுக்குள்ளே இருக்கும் 'ஜீனி' எனப்படும் மந்திரவாதியை தட்டி எழுப்புங்கள். உலகமே உங்கள் கையில்.

பயப்படாதீர்கள்.

உலகமே உங்களுக்காகத்தான் படைக்கப் பட்டிருக்கிறது. எனவேதான் "வறுமையில் வாடாதீர்கள். வறுமையில் வாட வேண்டிய அவசியமில்லை. நீங்கள் எல்லா வசதிகளுடனும் வாழலாம்" என்பதை எடுத்துக்காட்ட இந்த தொடரை எழுதினேன், 'ராணி' பத்திரிக்கையில் ஏன் ராணி பத்திரிக்கையில்? அங்கே ஒரு மனிதர் இருக்கிறார். அவர் உங்களைப் போல ஒரு சாதாரண நிலையிலிருந்து தன் சிந்தனையாலும், அறிவாலும், உழைப்பாலும் மிக உயர்ந்த நிலைக்கு சென்றவர். அவரே ஊர் உலகிற்கு ஒரு எடுத்துக்காட்டு. அவர் ஒரு மகத்தான பணியைச்செய்கிறார்.

இன்றைய சமுதாயத்திலே யார் அடிமட்டத்தில் இருக்கிறார்களோ, யாருக்கு உற்சாகமும் நம்பிக்கையும் நல்ல அறிவுரைகளும் தேவையோ, இந்த நாட்டில் யார் முதலில் முன்னுக்கு வர வேண்டுமோ அவர்களுக்காக எழுதுகிறார், பாடுபடுகிறார், பத்திரிக்கை நடத்துகிறார்.

அந்த அடித்தள மக்கள் என்று தங்களை உணர்ந்து புது நம்பிக்கை பெற்று, என்று வீறு கொண்டு எழுகிறார்களோ அன்றுதான் இந்த நாட்டிலே சமதர்ம சமுதாயம் நிலவும்; உண்மையான ஜனநாயகம் தழைக்கும். காந்தி கண்ட 'கடையனுக்கும் கடைத்தேற்றம்' என்ற உயர்நிலை உருவாகும்.

எனவே அவர்களைத் தொட வேண்டும் என்கிற நல்லெண்ணத்தில் ராணி ஆசிரியர் திரு. அ.மா. சாமி கேட்டுக் கொண்டதை உணர்ந்து நான் எழுதினேன். "தம்பீ, சிந்தனை செய்!" என்று துவங்கி "மகளே! உன் காலில் நில்!" என்று முடித்திருக்கிறேன்.

நமது நாட்டிலே பாவப்பட்டவர்களில், மிகவும் பாவப்பட்டவர்களாய் இருப்பவர்கள், கிராமத்தில் அறியாமையிலும் வறுமையிலும் வாழ்ந்து குடும்பம் நடத்தும் பெண்கள்தான்.

எனவேதான் மக்கள் சக்தி இயக்கத்தில் படித்த இளைஞர்களை எல்லாம் “கிராமத்திற்கு செல்லுங்கள். அங்குள்ள பெண்களுக்கு வேலை வாய்ப்பிற்காக, உதவுங்கள்; சொந்த தொழில் செய்து வருமானம் பெற வழிவகை செய்து கொடுங்கள்'' என்று ஓயாமல் சொல்கிறோம்.

அவர்கள் வருமானம் பெற்றால் மகிழ்வான மன நிறைவான வாழ்க்கை வாழ்வார்கள். பொருள் தேவை தீர்ந்தது என்றால் ஊர் உலகம் பற்றி தெரிந்து கொள்வார்கள். அரசியல் விழிப்புணர்வு சமுதாய பொறுப்புணர்வு பெறுவார்கள். அவர்கள் அதைப் பெறும்போது அரசியல்வாதிகள் அவர்களுக்கு இனாம் கொடுத்து ஏமாற்றி அவர்களைப் பகடைக் காய்களாக உபயோகித்து ஆட்சியைப் பிடிக்க முடியாது.

உலக ஞானம் பெற்றவர்கள் தட்டிக் கேட்பார்கள். தட்டிக் கேட்கும் துணிவைப் பெறுவார்கள். நாட்டில் அநியாயம் ஒழியும். நல்ல ஜன நாயகம் தழைக்கும்.

கேரள மாநிலத்தில் பெண்கள் கல்வி கற்றதன் மூலம் இன்று அந்த மாநிலமே தமிழ்நாட்டை விட நல்ல பொருளாதார வளம் பெற்று இருக்கிறது. தெருவெல்லாம் சுத்தமாக இருக்கிறது. பெண்கள் வேலைக்குப் போகிறார்கள். சம்பாதிக்கிறார்கள். அதிகம் குழந்தை குட்டிகளைப் பெற்றுக் கொள்வதில்லை. எனவே பணம் நிறைய மிச்சமாகிறது சொந்த தேவைகளுக்கு.

எனவேதான் நாம் கிராமப் பெண்களுக்கு கல்வி புகட்ட வேண்டும். முதலில் அவர்கள் உழைப்பினால் நல்ல வருமானம் பெற ஒரு வாய்ப்பை ஏற்படுத்திக் கொடுக்க வேண்டும்.

இது எல்லாம் சாத்தியம். உங்களால் உயர முடியும் என்ற நம்பிக்கையை, விழிப்புணர்வை ஏற்படுத்த வேண்டும். அந்த விழிப்புணர்வை பத்திரிக்கைகளில் தொடர்ந்து "மகளே, நீ முன்னேறு!" சுயவளர்ச்சி, தன்னம்பிக்கை பற்றி சுமார் 20 ஆண்டுகள் எழுதியதன் விளைவாக இன்று இளைஞர்கள் தமிழ் நாடெங்கும் விழிப்பு பெற்றிருக்கிறார்கள். துணிவுடன், நம்பிக்கையுடன் பெரும் எதிர் பார்ப்புடன், தன்னால் சாதிக்க முடியும் என்ற நம்பிக்கையுடன் காணப்படுகின்றனர். பல்வேறு துறைகளில் இறங்குகிறார்கள். தொழில் செய்கிறார்கள். இருபதாண்டுகளாக விஞ்ஞான பூர்வமான மனவியலை தமிழ் மக்களுக்கு எழுதியது வீண் போகவில்லை. இன்று எல்லாப் பத்திரிக்கைகளிலும் மனவியலும் சுயவளர்ச்சியும் ஒரு முக்கிய பகுதியாக இடம் பெறுகின்றன.

இது நிறைவு தரும் விஷயம்.

இத்தகைய மனவியல் - சுயவளர்ச்சி - தன்னம்பிக்கை கட்டுரைகள் முதன் முதலில் தொடர்ச்சியாக ஒரு பத்தாண்டுகள் விகடனில் வெளி வந்தது என்பதும் அத்தகைய தன்னம்பிக்கை விழிப்புணர்வு பிற மாநிலங்களில் பிற மொழிப் பத்திரிகைகளில் இன்னும் வெளிவரவில்லை என்பதும் குறிப்பிடத் தக்கது.

இதனால் என்ன நேரும், என்று நான் எதிர்பார்க்கிறேன்?

நாம் மட்டும் கவனத்துடன் இதில் கருத்து செலுத்தி வளர்ந்தோமானால் தமிழ்நாடு இந்தியாவுக்கு தலைமை வகிக்கும், வழிகாட்டும் என்று நம்பலாம். முன்பு மேல்மட்டத்தில் நிறைய அறிஞர்கள், திறமைசாலிகள் இருந்தார்கள். இனி எல்லா மட்டத்திலுமுள்ள மக்களும் நல்வாழ்வு வாழ்ந்து தமிழ்நாடு மொத்தமாக புத்திசாலித்தனத்திலும், அறிவிலும், திறமையிலும், தொழிலிலும் சிறந்து விளங்கும். இந்த விழிப்புணர்வுக்கு இன்று தடையாக இருப்பது இன்றைய அரசியல் நிலைதான். அடி மட்டத்து மக்களும் விழிப்புணர்வு பெறும்போது இந்த நிலை மாறிவிடும்.

எனவேதான் விழிப்புணர்வை அடி மட்டத்திற்கு எடுத்துச் செல்ல ராணியில் எழுதினேன்.

இதே காரியத்தை கடந்த ஐந்து வருடங்களாக மக்கள் சக்தி இயக்கத்தில் செயலில் காட்டி வருகிறோம். திட்டமுடன் செயல்பட்டால் செய்ய முடியாத காரியம் இல்லை.

எனவே இதைப்படிக்கும் இளைஞர்கள், இதன் செய்தியை அடிமட்டத்திற்கு எடுத்துச் செல்லுங்கள். அங்கே வாரத்தில் ஒரு நான்கு மணி நேரம் பாடுபடுங்கள். ஏனெனில்

வலிந்தவர்கள் நலிந்தவர்களுக்கு கடமைப் பட்டிருக்கிறார்கள்.

படித்தவர்கள் படிக்காதவர்களுக்கு கடமைப் பட்டிருக்கிறார்கள்.

பணக்காரர்கள் ஏழைகளுக்கு கடமைப் பட்டிருக்கிறார்கள்.

இப்படி உதவுவதிலும் ஒரு சுயநலம் இருக்கிறது. ஏனெனில் "கொடுப்பதில்தான் பெறுகிறேன்!" என்பது பொன்மொழி. நீங்களும் நானும் பெறப் போவது ஒரு நல்ல சமுதாயத்தை.

அடுத்ததாக, ஒரு முக்கிய விஷயம். இக்கட்டுரைகளை அதிகம் இளைஞர்களும், படித்தவர்களும் வயது வந்தவர்களும் விரும்பி படிக்கக்கூடும்.

அவர்களுக்கும் மற்றவர்களுக்கும் ஒரு வார்த்தை. வெற்றிக்கு முதல் படியை படியுங்கள். பாடுபடுங்கள். வெற்றி பெறுங்கள். சாதனை புரியுங்கள்.

அதே சமயம் வெற்றியே எல்லாமல்ல என்ற உயர் உண்மையை வெற்றி பெற்றவுடன் உணர்வீர்கள்

வெற்றி, சாதனை, முன்னேற்றம் என்று வளர்ந்துவரும் நாடுகளிலும், வளர்ந்த நாடான அமெரிக்காவிலும் - மனிதன் ஓடுகிறான். வெற்றியே எல்லாமல்ல; சாதனையே சகலமுமல்ல.

வெற்றியை நோக்கி நாம் நியாயமாக, நல்லெண்ணத்துடன் யாரையும் ஏமாற்றாமல் வஞ்சிக்காமல் நாணயத்துடன் நல்ல பெயருடன் வாழ்கிறோமே அந்த வாழ்க்கைப்பாதை அந்த வாழ்க்கைப் பயணம்தான் இனிமையானது. வாழ்க்கை என்பது போய்ச் சேருகின்ற ஊரல்ல. வெற்றியின் உச்சம் ஒரு கணம்தான். ஆனால் அதை அடைய நாம் ஆர்வமுடன் உண்மையாக உழைக்கிறோமே அதில்தான் இனிமை இருக்கிறது. அதேபோல காதலின் உச்சமும் சிலகணங்கள்தான். அது மனைவியாக முடியக்கூடும்; உடல் உறவிலே முடியக்கூடும். ஆனால் அதை அடைவதற்காக மனிதன் மனக்கோட்டை

கட்டுகிறானே, வியூகம் வகுக்கிறானே, திட்டமிடுகிறானே, ஜீவதாகத்துடன் போராடுகிறானே அதுதான் என்றும் நினைவில் பசுமையாக இருந்து நிறைவைத்தரும் நினைவுகளாக மனிதனை வாழ்விக்கிறது.

தம்பீ! மகளே!

வாழ்க்கை என்பது சேருகின்ற கடைசி இடமல்ல.

அது ஒரு பயணம்.

அதை அனுபவி,

ஏனெனில் இதைப் பிடித்துவிட்டு நீ தொழிலில் இறங்கக்கூடும், சாதனை புரிய திட்டமிடக்கூடும், வெற்றியை நாடிய பயணத்தை துவங்கக்கூடும்.

இன்று வெற்றியின் உச்சத்தில் இருப்பவர் களைப் பார். பதவியின் உச்சத்தில் பலர் பிரதமர்களாக இருக்கக்கூடும்.

"அவரால் முடிவெடுக்க முடிவதில்லை. அவரால் துணிவாக ஒரு காரியத்தைச் செய்ய முடிவதில்லை. அவரால் தெளிவாக நாட்டின் பிரச்சனையை அணுக முடிவதில்லை. பேசாமல், விஷயங்களை ஒத்திப் போட்டால் எல்லாம் சரியாகி விடும் என்று எண்ணுகிறோம்" என்று வைத்துக் கொள்ளுங்கள். அவர் பதவியின் உச்சத்தில்தான் இருக்கிறார்.

அவரால் நாட்டுக்கு என்ன பயன்?

தன் பதவிதான் முக்கியமென்று நாட்டை அல்லவா நலிவடையச் செய்கிறார்கள் இவர்கள்.

இதற்கு "ஆமாம்" போடும் அமைச்சரவை.

அப்படி எல்லாம் நீ வெற்றியின் உச்சத்திற்கு போகாதே.

பதவி உச்சமல்ல.

பதவி என்பது ஒரு வாய்ப்பு.

எனவே வெறும் பதவியை மட்டுமே லட்சியமாகக் கொண்டு பயணத்தை துவக்காதே. பதவியில் நன்மை செய்ய முடியவில்லை என்றால் வெற்றிக்கு அர்த்தமில்லை. புரிந்து கொள்.

பதவி சுகத்தையே பெரிதாக எண்ணி தலைமையிலேயே இருப்பேன் என்று கிழட்டு வாலிபர்கள் சொல்லாமல் சொல்கிறார்களே அதுபோன்ற பாபத்தை செய்யாதே.

அதேபோன்று இவன்

ஒழுக்கத்தைக் கெடுத்த மாபாவி

ஊரைக்கெடுத்த பாதகன்

நாட்டைக் கொள்ளையடித்த நயவஞ்சகன்

சாதி வெறியை வளர்த்த சண்டாளன்

பொய்யை மெய்யெனக் காட்டிய புரட்டன்

தம் குடும்பம் வாழ ஊரை அடகு வைத்தவன் என்றெல்லாம் உன்னைக் கூறுமானால்

மகளே, அது வெற்றியே அல்ல. அது பெரியவர்கள் இடும் சாபம். உனது ஊழ்வினையாக காலத்திற்கும் உன்னை தொடரப் போவது.

நீ பெற்றிருக்கும் பணம் பணமே அல்ல.

நீ பெற்றிருக்கும் புகழ் புகழே அல்ல.

உன் பதவி பதவியே அல்ல.

எனவே வெற்றியை, ஊர் நன்மையை நாடி அணுகு. உண்மையை நாடி அணுகு. நீ நாளை எழுதப்போகும் சுய சரித்திரம் "சத்தியத்துடன் நான் நடத்திய பரிசோதனைகள்" என்பதாக இருக்கட்டும்.

வாழ்த்துக்கள்.

சக பயணி

**எம். எஸ். உதயமூர்த்தி**

# பொருளடக்கம்

1

## தம்பி! சிந்தனை செய்!

**தை** பிறந்தது. எங்கு பார்த்தாலும் மகிழ்ச்சி. பொங்கல் கரும்பு, புது வெல்லம் என்று எங்கும் ஒரே குதூகலம். மிதக்கின்ற காற்றில்கூட ஒரு துடிப்பும் மகிழ்ச்சித் துள்ளலும் நிலவுவதாகப் பட்டது. அவ்வளவு உற்சாகம்!

திண்ணையில் உட்கார்ந்திருந்தேன். ஒரு குடு குடுப்பைக்காரன் வந்தான். சற்று உற்றுப் பார்த்தபோது பாரதியாரிடம் வந்த அதே குடுகுடுப்பைக் காரன் போலப் பட்டது. எனக்கு ஆனந்தம்.

"நல்லகாலம் பொறக்குது! அய்யாவுக்கு நல்ல காலம் பொறக்குது! ஜக்கம்மா, காளி, சாமுண்டி, பகவதி! அய்யாவுக்கு நல்ல சேதி சொல்லு!" என்று குடுகுடுப்பையை 'கடகட' வென்று அடித்தான்.

எனக்கு எழுச்சி ஏற்பட்டது. நிமிர்ந்து உட்கார்ந்தேன். குடுகுடுப்பைக்காரன் எங்கேயோ வானத்தைப் பார்த்தான். ஒரு கணம் கண்ணை மூடிக் கொண்டான்.

"அய்யாவுக்கு வடக்கேயிருந்து நல்ல சேதி வந்திருக்கு! அய்யா மனசு போல எல்லாம் ஆறா ஓடுது! பணம் குவியுது! பாசம் பெருகுது! தொட்ட காரியம் துலங்குது".

"சாமிமார்க்கெல்லாம் தொப்பை சுருங்குது. ஊரை ஏமாத்தறவன் எல்லாம் போறான், போறான், அய்யோன்னு போறான்! தர்மம் தழைக்குது. ஞாயம் பொழைக்குது. சொல்லு நீ ஜக்கம்மா, சாமுண்டீ, பகவதீ!" என்றான்.

"சார்! வடக்கேயிருந்து வந்த நல்ல சேதி - நமக்கு டில்லியிலிருந்து பாசனத்துறை அமைச்சர் கிட்டே இருந்து கடிதம் வந்திருக்கு. 'எல்லாம் ஆறா ஓடுது'ன்னது நம்ம ஆற்று நீர் இணைப்பு நிச்சயமாய் நடக்கும் போல இருக்கு" என்று என் நண்பர் விளக்கம் கொடுத்துக் கொண்டிருந்தார். சாமிமார்க்கெல்லாம் தொப்பை சுருங்குது என்று சொன்னதில் நிரம்ப மகிழ்ச்சி எனக்கு. சாமிமார்களெல்லாம் களத்தில் இறங்கி, தொப்பை சுருங்கச் சுருங்க வேலை செய்தால் எவ்வளவு நல்லது!

எல்லாவற்றிற்கும் முத்தாய்ப்பாக 'ஊரை ஏமாத்தறவன் எல்லாம் போறான் போறான்' என்று சொன்னது என் பொறியில் தட்டியது. நம் நாட்டில் அமைச்சர்களிலிருந்து அதிகாரிகள் வரை ஊரை ஏமாற்றி, நம் வரிப்பணத்தை, கொள்ளை அடிக்கிறார்கள். அவர்கள் எல்லாம் 'அய்யோ' என்று போகப் போகிறார்களாம். சிறைக்குப் போவார்களோ? அப்பா! என்ன மகிழ்ச்சி!

வீட்டிற்குள் போனேன். ஒரு வேட்டியை எடுத்து வந்து அவனிடம் கொடுத்தேன்.

குடுகுடுப்பைக்காரன் போய்விட்டான். என் மனம் சிந்தித்தது. என்னைப் பற்றியும் இந்த நாட்டைப் பற்றியும் சரியாகச் சொன்ன குடுகுடுப்பைக்காரன் ஏன் ஏழையாக இருக்கிறான்? இரந்து பிச்சை கேட்கிறான்? மனதிலே ஜக்கம்மா இருக்கிற அளவுக்கு, அவன் பிறரைப் பற்றி எண்ணுகிற அளவுக்கு, ஏன் அவன் தன்னைப் பற்றி எண்ணுவதில்லை?

தன்னை ஒரு பிச்சைக்காரனாகவே எண்ணிக் கொண்டிருக்கிறான்! அடப்பாவி!

அதாவது நம்மில் பலர், நாட்டைப் பற்றியும், பிறரைப் பற்றியும், ஊர் வதந்தியைப் பற்றியும், விமர்சிக்கிற அளவுக்கு தன் வாழ்க்கையைப் பற்றி எண்ணுவதில்லை; விமர்சிப்பதில்லை. நம் வாழ்க்கையைப் பற்றி நாம் அக்கறை எடுத்துக் கொள்வதில்லை. காரணம், "அது நம் கையில் இல்லை. ஏதோ ஓடிக்கொண்டிருக்கிறது. ஆண்டவன் விட்ட வழி" என்று எண்ணுகிறோம்.

நாம் எல்லாரும் எல்லா வசதியுடனும் சுகங்களுடனும், மாளிகை காருடனும் வாழ ஆசைப்படுகிறோம். ஆனால் நம்மில் பலரிடம், ஆசை ஆசையாக நின்று விடுகிறது. "இது நடக்குமா?" என்று நமக்கே சந்தேகம். இதற்காக நாம் திட்டமிடுவதில்லை. நாம் செயல்படுவதில்லை.

கும்பகோணத்தில் வி.ஆர். மூர்த்தி என்றொருவர் பக்தபுரி அக்கிரகாரத்தில் இருந்தார். கிராமங்களில் போதுமான ஆங்கில வைத்தியர்கள் ஏழை மக்களுக்கு கிடைப்பதில்லை என்பதை அவர் உணர்ந்தார். அத்துடன் ஆங்கிலப் படிப்புப் படித்து டாக்டராக வர ஐந்து ஆண்டும், நிறையப் பணச் செலவும் ஆகின்றன என்பதைத் தெரிந்து கொண்டார்.

எனவே அவர் தான் கற்றிருந்த ஓமியோபதி வைத்தியத்தை எல்லாருக்கும் தபால் மூலம் சொல்லிக் கொடுக்கத் தொடங்கினார். அந்தத் தொழிலில் ஒரு பொன் சுரங்கம் இருந்தது. பணக்காரர் ஆனார். இவரால் பல கிராமங்களில் ஓமியோபதி மருத்துவர்கள் தோன்றினார்கள்.

அக்கம்பக்கத்திலுள்ள எல்லாருக்கும் அவர் மீது பொறாமை —" அவர் பணக்காரராகி விட்டார். நாம் அப்படியே இருக்கிறோமே" என்று.

பார்த்தார் மூர்த்தி. தன் மாளிகையின் வாசல் சுவரில் பெயர்ப் பலகை பதிக்குமிடத்தில் கருங்கல்லில் செதுக்கி வைத்தார். என்ன வாசகம் தெரியுமா?

**"உழைப்பால் முன்னேறலாம்.**
**பொறாமையால் அல்ல."**

பலரும் வெற்றி பெற்றவர்களைப் பார்த்துப் பொறாமைப்படுகிறார்கள். ஆனால், "அவன் எப்படி வெற்றி பெற்றான்? எப்படி உழைத்தான்? எப்படி இரவு பகலாக அதே நினைவாக சிந்தித்தான், திட்டம் தீட்டினான்?" என்பதை உணர்வதில்லை. மூர்த்தி எழுதியது போல பொறாமைப்பட்டு புழுங்கிச் சாகிறார்கள், அவ்வளவுதான்.

வாழ்க்கை என்பது அவ்வப்போது நேருகின்ற நிகழ்ச்சிகளுக்கு ஈடுகொடுக்கிற விஷயமல்ல. நமது வாழ்க்கையை நாம் படைக்க முடியும். அதுவும் நாம் விரும்புகிறபடி.

அதற்கு என்ன செய்ய வேண்டும்?

முதலில் யோசிக்க வேண்டும்.

"புதிய ஆண்டில் என் திட்டமென்ன? என்ன சாதிக்க விரும்புகிறேன்? அடுத்த ஐந்தாண்டில் என்ன

செய்ய விரும்புகிறேன்? என் வாழ்வில் எப்படிப்பட்ட மனிதனாக ஆக விரும்புகிறேன்?" என்கிற சிந்தனையும் திட்டமும் வேண்டும்.

105 மாடிக் கட்டிடமானாலும் சரி. கடலுக்கடியில் ரெயில் விடுவதானாலும் சரி, சந்திரனை நோக்கிய பயணமானாலும் சரி, முதலில் சிந்திக்கிறார்கள். பிறகு திட்டமிடுகிறார்கள். சில ஆண்டுகளில் எல்லாம் சாத்தியமாகிறது.

முல்லா நசிருதீன் ஒருநாள் குதிரையில் வெளியூருக்குப் போய்க் கொண்டிருந்தார். திடீரென்று மழை வந்தது. மரத்தடியில் ஒதுங்கி சட்டையைக் கழற்றி மடித்து கீழே வைத்து அதன் மீது உட்கார்ந்து கொண்டார். மழை விட்டதும் மடித்து வைத்த சட்டையைப் போட்டுக்கொண்டு கிளம்பினார்.

சற்று தொலைவில் எதிரில் வந்த அவர் நண்பன் ஆச்சரியப்பட்டுப் போனான்.

"என்ன முல்லா! இவ்வளவு மழையில் எப்படி சட்டை எல்லாம் நனையாமல் தப்பியது?"

"எல்லாம் என் குதிரைதான்! வேகமாக ஓடியது!" என்றார் முல்லா.

அப்படிப்பட்ட குதிரையை விலை பேசி வாங்கிவிடுவது நல்லது என்று நண்பன் தீர்மானித்து, வாங்கிக் கொண்டான். மறுநாளும் மழை வந்தது.

முல்லாவின் நண்பன் குதிரையை விரட்டினான். குதிரை என்ன ஓடியும், அவன் சட்டை எல்லாம் நனைந்து போயிற்று.

நேராக முல்லாவிடம் வந்தான். "என்ன முல்லா, குதிரை என்ன வேகமாக ஓடியும் சட்டை எல்லாம் நனைந்து போய்விட்டதே?" என்றான்.

முல்லா அவனை ஏற இறங்கப் பார்த்தார். "உனக்கு மண்டையிலே 'பிஸ்தா' இருக்கிறதா?" என்று கேட்டார். "மழை வந்தால் ஒதுங்க வேண்டும் என்கிற அறிவு வேண்டாம்?"

பலருக்கும் மண்டையிலே 'மசாலா' இருக்கிறது. ஆனால், பயன்படுத்துவது இல்லை. ஏதோ வாழ்க்கை ஓடிக் கொண்டிருக்கிறது. தினம் காலையில் எழுந்திருக்கிறோம்; உண்கிறோம்; இரவு வந்ததும் உறங்குகிறோம்'' என்றுதான் வாழ்க்கையை ஓட்டுகிறார்கள்.

"ஏன் இப்படி, செக்கு மாடு சுற்றுவது போல இருக்க வேண்டும்?'' என்று யாரும் சிந்தித்துப் பார்ப்பதில்லை.

"ஏன் பணக்காரனாக ஆகக்கூடாது? ஏன் படித்துப் பட்டம் பெற முடியாது? ஏன் ஒரு வீடு வாங்கக் கூடாது?"

பலரும் இன்று தான் இருக்கிற நிலையை மட்டுமே பார்த்து "வேறு வழியில்லை!" என்று எண்ணி காலத்தை ஓட்டுகின்றனர்.

முன்னுக்கு வருபவர்களோ "இன்று நான் இப்படி இருக்கலாம். இது இப்படியே இருக்கப் போவதில்லை. நான் மாற்றுவேன். என்னால் மாற்ற முடியும்'' என்று சூளுரைத்துக் கொள்ளுகிறார்கள்.

சிலநேரம் சிலர் நம்மைத் தாழ்த்திப் பேசுகிற வார்த்தை நம்மிடம் ரோசத்தை உண்டுபண்ணும். சிலர் நமக்கு செய்கின்ற அவமானம், நம்மை தூண்டிவிட்டு, சாதிக்க வைக்கும்.

நான் தொழில் தொடங்கிய நேரம். மேத்தா என்றொரு வட இந்திய நண்பர் எங்களிடம்

பொருளை வாங்க வந்து பேரம் பேசினார். லாபமே இல்லாத அளவுக்கு விலையைக் குறைத்துக் கேட்டதால் வியாபாரம் தடைப்பட்டது.

"உனக்கு வியாபாரமே தெரியவில்லை. நீ முன்னுக்கு வரப்போவதில்லை. இப்படி வியாபாரம் செய்தால் நீ விரைவில் தொழிற்சாலையை மூடத்தான் போகிறாய்!" என்று அர்ச்சித்தார்.

ஒரு கணம் நான் பயந்தே போனேன். ஏனெனில், அவரோ பெரிய தொழிலதிபர்.

எனக்குள் ரோசம் பிறந்தது. "நாம் முன்னுக்கு வந்து இவருக்கு சரியாக பாடம் கற்பிக்க வேண்டும்" என்று எனக்குள் ஆழமாக, கோபமாக சொல்லிக் கொண்டேன். மூன்றாண்டுகளில் எங்கள் வியாபாரமும் - உற்பத்தியும் "ஓகோ" என்று போயின. தற்செயலாக மேத்தா இருந்த ஊருக்குப் போகவேண்டி இருந்தது. "சந்திப்போம்" என்று அவரைத் தேடினேன்.

"அவர் அந்த தொழில்லே இல்லிங்களே. ஆள் ஊரை விட்டே போயிட்டாருங்க" என்றார்கள்.

கொஞ்சம் யோசியுங்கள்!

# 2

## எது முக்கியம், தம்பி?

**வா**ழ்வில் எது முக்கியம் என்பதைக் கொஞ்சம் யோசித்துப் பாருங்கள்!

யாராவது புதிய மனிதர்களை எங்காவது சந்தித்தோமானால் முதலில் நமது பெயரைக் கேட்கிறார்கள். அடுத்து அவர்கள் என்ன கேட்கிறார்கள்?

"என்ன செய்கிறீர்கள்? எங்கே வேலை பார்க்கிறீர்கள்?" என்பதைத்தான்.

'என்ன வேலை செய்கிறோம், எங்கே வேலை பார்க்கிறோம்' என்பதிலிருந்து நம்மைப் பற்றி ஒரு அனுமானத்திற்கு வர முயல்கிறார்கள். நாம் செய்யும் வேலை - தொழில் - நம்மை அடையாளம் காட்டுகிறது.

ஏதாவது தொழில் செய்தால்தான் நாம் பிழைக்கலாம். நமக்கு வயிறு இருக்கிறது. நம்மை நம்பி பெற்றோரும் மனைவி மக்களும் இருக்கிறார்கள். எனவே "வாழ்வில் எது முக்கியம்" என்று நூற்றுக்

கணக்கான பேரை சர்வே செய்தபோது, "தொழில் தான் முக்கியம்!" என்றார்கள்.

நீங்கள் கொஞ்சம் சொல்லிப் பாருங்கள்! "நான் ரசிகர் மன்றம் வைத்திருக்கிறேன்!" என்று. அல்லது நான் "கட்சியில் இருக்கிறேன்" என்று. அது ஒரு தொழிலா என்று கொஞ்சம் நீங்களே யோசித்துப் பாருங்கள்!

எப்படி நல்ல வேலையைப் பெறலாம்? நல்ல தொழிலில் இறங்கலாம்?

நல்ல படிப்பு வேண்டும். எழுதப் படிக்கத் தெரிய வேண்டும். ஊர் உலக வரலாறு தெரிய வேண்டும். நமது ஊர், நமது மாவட்டம், மாநிலம், நாடு, உலகம் என்று உலகியல் தெரிய வேண்டும். அறிவியல் தெரிய வேண்டும். இப்படிப்பட்ட கல்வியை எவ்வளவுக்கு எவ்வளவு அதிகமாகத் தெரிந்து கொண்டிருக்கிறோமோ, அவ்வளவு நாம் எடுக்கும் வேலையைத் திறமையுடன் செய்ய முடியும். படிப்புக் கேற்றபடி சம்பளம் கிடைக்கிறது.

## இந்தியா முன்னேறும்

இந்தியா முன்னேறும் என்று சொல்பவர்கள் இதைத்தான் சொல்கிறார்கள்: அதாவது "இந்தியர்கள் தங்கள் குழந்தைகளைப் "படி படி" என்று சொல்லி படிப்புக்கு முக்கியத்துவம் கொடுக்கிறார்கள். அதனால் இன்று அவர்கள் ஏழையாக இருந்தாலும் சரி, அவர்கள் குழந்தைகள் பெரிய ஆபீசராகவோ, கலெக்டராகவோ, விஞ்ஞானியாகவோ நாளை ஆவார்கள். இந்தியா முன்னேறிவிடும்" என்று கருத்துத் தெரிவிக்கிறார்கள்.

பள்ளிப் படிப்பு என்பது ஒன்றும் கஷ்டமானதல்ல. கோடிக்கணக்கானவர்கள் உலகம் முழுக்க செய்கிற வேலையைத்தான் நாமும் செய்கிறோம். அப்படியே படிப்பு வராவிட்டாலும், குறைந்தது எழுதப் படிக்கவாவது நமக்குத் தெரிய வேண்டும். அன்றாடப் பத்திரிகையைப் படிக்கிற அளவுக்கு - பிறருக்கு ஒரு கடிதம் எழுதுகிற அளவுக்கு நமக்கு படிப்பு தேவை. பத்திரிகை படிக்கும்போது நாம் 'உலக ஞானம்' பெறுகிறோம். ஊர் உலகம் இப்படிப் போகிறது என்று தெரிந்துகொள்ளும்போது நாமும் பயப்படாமல் இறங்கி பிழைத்துக்கொள்ள முடியும். இன்று இருக்கும் பெரிய தொழிலதிபர்கள் சிலர் அதிகம் படிக்காதவர்கள்தான். ஆனால், எதையும் சமாளிக்கும் உலக ஞானம் அவர்களிடம் நிறைய உண்டு.

அவர்கள் எல்லாம் வாழ்வில் ஒரு குறிக்கோளை, "நான் பெரிய பணக்காரனாக ஆகப் போகிறேன், நான் பெரிய கலெக்டராக ஆகப் போகிறேன்; பெரிய கம்பெனி வைத்து நடத்தப் போகிறேன்" என்று சின்ன வயதிலேயே ஆசைப்பட்டவர்கள்.

அவர்கள் சினிமா மோகத்திலோ, பெண்ணாசையிலோ, கள்ளச் சாராயம் காய்ச்சுவதிலோ, குடிப்பதிலோ இறங்குவதில்லை.

அவர்களுக்கு வாழ்க்கையில் எது முக்கியம் என்று தெரியும். கண்ணுக்குப் பட்டை போட்ட குதிரை எப்படி நேர் சாலையைப் பார்த்துக் கொண்டு ஓடுகிறதோ அதைப் போல கண்ணுங் கருத்துமாக தங்கள் தொழிலில், தாங்கள் முன்னுக்கு வருவதில்தான், கவனம் செலுத்துவார்கள்.

**ரசிகர் மன்றங்கள்**

நமது நாட்டில் - தமிழ் நாட்டில்தான் - சினிமா ரசிகர் மன்றங்கள் இருக்கின்றன. பக்கத்து மாநிலமான கேரளாவில் கூட இதெல்லாம் இல்லை. உத்தரப்பிரதேச மாநிலத்தில் இதெல்லாம் இல்லை; சினிமா நடிகர்களையும் நடிகைகளையும் "ஆகா ஓகோ!" என்று தலையில் தூக்கி வைத்துக்கொண்டு கொண்டாடும் இளைஞர்கள் இங்குதான் ஏராளம். தான் காதல் கொண்ட நடிகர், நடிகை நடித்த முதல் காட்சிக்கு அவர் படத்தின் முன் தூப தீபம் ஆராதனை எல்லாம் செய்கிறார்கள். ஒரு நாலு ஊரில் ஒரு ரசிகர் மன்றம் இருந்தால்கூட, "அகில உலக" ரசிகர் மன்றம் என்று பெயர் வைப்பார்கள்!

தங்கள் நேரத்தை, பணத்தை, உழைப்பை எல்லாம் இந்த ரசிகர் மன்றத்துக்கு வீணடிப்பார்கள். பிற நாடுகளில் இப்படி இருக்கிறதா? இல்லை! இல்லவே இல்லை!!

அங்கெல்லாம் அவர்களுக்கு அவர்கள் தொழில்தான் முக்கியம். அவர்கள் குடும்பம் மனைவி மக்கள்தான் முக்கியம். வீட்டில் சினிமாக்காரர்கள் படமோ அரசியல் தலைவர்கள் படமோ மாட்டப் பட்டிருக்காது. மாறாக குடும்பப் படம், அவர்களை வளர்த்த அவர்களின் பெற்றோர் படம் இவைதான் இருக்கும்.

சினிமா நடிகர் என்பவர் பஸ் டிரைவரைப் போல, ஓட்டல் சர்வரைப் போல ஒரு தொழில் செய்கிறார், அவ்வளவுதான். ஒரு ஓட்டல் சர்வர் பிரமாதமாக நல்ல காப்பி போட்டுத் தருகிறார் என்று நாம் அவருக்கு ரசிகர் மன்றம் வைக்க முடியுமா? ஒரு பஸ் டிரைவர் மிக நன்றாக ஓட்டுகிறார் என்பதற்காக

ஒவ்வொரு முறை பஸ் புறப்படும்போதும் அவருக்கு மாலை போட்டு தீபம் காட்டி அவரை வழி அனுப்புகிறோமா?

செய்வதில்லை!

அதுபோலத்தான் ஒரு நடிகரும் சரி, அரசியல் வாதியும் சரி. அவர்கள், அவர்கள் வேலையை - தொழிலைச் செய்கிறார்கள். நாம் நம் தொழிலில் கவனம் செலுத்தினால்தான் நாம் பிழைக்க முடியும்; நமக்கு சாப்பாடு கிடைக்கும்!

**சினிமாக் கனவு!**

நமது ஊரில் இளைஞர்கள் எல்லாரும் சினிமாவில் சேர்ந்து நடிகராகிவிடலாம், கை நிறைய சம்பாதித்து விடலாம் என்று எண்ணிக் கொண்டிருக்கி றார்கள்.

ஒரு கணம் யோசித்துப் பாருங்கள். வீட்டுக்கு வீடு எல்லாரும் நடிகர்களும் நடிகைகளுமாக மாறி விடுகிறார்கள் என்று கற்பனை செய்து பாருங்கள். உங்கள் வீட்டில் உங்கள் அப்பா, நீங்கள், உங்கள் தம்பி, உங்கள் அம்மா, அத்தை, தங்கை எல்லாரும் நடிகர்கள்- நடிகைகள் என்று யோசித்துப் பாருங்கள்!

பக்கத்து வீட்டிலும் இப்படியே! ஊர் முழுவதும் எல்லாரும் இப்படி ஆசைப்பட்டு தமிழ்நாடு நடிகை நடிகர்களால் நிறைந்திருக்கிறது என்றால், பிழைப்பு எப்படி நடக்கும்?

வீட்டிலுள்ள எல்லாரும் உழைத்து அதிகமான நெல்லையோ, வாழைக்காயையோ, மல்லிகைப் பூவையோ உற்பத்தி செய்தால், மிகுந்ததை வெளி நாடுகளுக்கு அனுப்பி நாம் பணம் பெற முடியும்.

அந்தப் பணத்தை வைத்து நாம் நமக்கு வேண்டிய வெளிநாட்டுப் பொருளை வாங்கிக்கொள்ள முடியும்.

மாறாக, நம் நாடு நடிகர்களாலேயும் வழக்கறிஞர்களாலும், டாக்டர்களாலும், ஆசிரியர்களாலும், காப்பிக்கடைக்காரர்களாலும் பார்பர் கடையினாலும் நிறைந்திருக்கிறதென்றால் என்ன ஆகும்? இந்தத் தொழில் எல்லாம் முதலில் கூறிய உற்பத்தி செய்கிறவர்களுக்கு, அவர்கள் குழந்தைகளுக்கு, குடும்பத்திற்கு, உதவுகிற தொழில்கள்தான். அதாவது பிறருக்குத் தொண்டு செய்கிற தொழில்கள். ஆகவேதான் பொருளாதாரத்தை "உற்பத்தி செய்கிற இனம்" என்றும் அவர்களுக்கு உதவியாக "தொண்டு செய்கிற இனம்" என்றும் இரண்டாகப் பிரித்திருக்கிறார்கள்.

நம் நாட்டில் உற்பத்தி என்றைக்கு அதிகமாகிறதோ அன்றுதான் எல்லாரும் அதிகமான வளத்தைக் காண முடியும். எல்லாரும் அந்த அதிக விளைச்சலை பங்கு போட்டுக் கொள்ள முடியும். நம் வருமானம் அதிகமாகும்.

எல்லா நாடுகளிலும் உற்பத்திக்கும் - தொண்டு வேலைக்கும் ஒரு விகிதம் இருக்க வேண்டும். தொண்டு வேலைக்கு ஆள் அதிகம் இருக்கிறார்கள். உற்பத்திக்குப் போதிய ஆள் இல்லை. நாம் எல்லாரும் வசதியுடன் வாழ வேண்டுமானால் நம் நாடு நிறைய உற்பத்தியாளர்களால் நிறைய வேண்டும். அப்போது தான் தமிழ்நாடு பணக்கார நாடாக, பஞ்சாப் போல, குஜராத் போல ஆக முடியும். நமது வருமானம் போல இரண்டரை பங்கு சம்பளம் அதிகமாக அங்கே பஞ்சாபில் இருப்பவர்கள் பெறுகிறார்கள். அதனால் தான் அந்த மாநிலத்து மக்கள் சொந்த வீடு வைத்துக் கொண்டும், மோட்டார் சைக்கிள், கார் வைத்துக்

கொண்டும், நல்ல வேட்டி சட்டை போட்டுக் கொண்டும், வசதியுடன் வாழ்கிறார்கள். நாமோ, நமது ஊர்க்காரர்களோ அவர்களுக்கு வேலை செய்ய டெல்லிக்கும் பம்பாய்க்கும் போய்க் கொண்டிருக் கிறோம்!

**சினிமா ! சினிமா !**

சமீபத்தில் நான் புத்தகக் கண்காட்சிக்குப் போயிருந்தேன். ஒரு புத்தக வெளியீட்டாளரான இளைஞர் சொன்னார் -

“ஐயா! எத்தனையோ நல்ல புத்தகங்கள் போட்டேன். விற்பனை இல்லை; வாங்குவோர் இல்லை. சில மாதம் முன் “சினிமாவில் சேருவது எப்படி?” என்று ஒரு புத்தகம் எழுதினேன். சின்ன புத்தகம்தான். ஆனால், சில மாதங்களில் அது மூன்று பதிப்பு வெளி வந்துவிட்டது. விற்பனை ‘ஓகோ!’ என்று போகிறது!” என்றார்.

“சுயமாக உழைத்து முன்னேறுவது எப்படி?”, “நீங்களும் எப்படி ஒரு தொழில் அதிபர் ஆகலாம்?” என்று நான் ஒரு இருபது ஆண்டுகளாக தன் முன்னேற்ற நூல்கள் எழுதி வருகிறேன். இப்போது நிறைய பேர் இப்படி எழுதி வருகிறார்கள். இந்த புத்தகங்கள்தான் அதிகம் விற்கின்றன என்று பதிப்பாளர்கள் சொல்கிறார்கள்.

இருந்தாலும் “சினிமாவில் சேருவது எப்படி?” ஓராண்டிற்குள் மூன்று பதிப்பு விற்பனை ஆகிற தென்றால், நம் இளைஞர்கள் உழைத்து முன்னேறுவதில் நம்பிக்கை வைக்கிறார்களா? நிரந்தரமாக வெற்றி பெறுவதில் நம்பிக்கை வைக்கிறார்களா? அல்லது திடீர்ப் பணக்காரராவதில்

நம்பிக்கை வைக்கிறார்களா? அல்லது நிரந்தரமில்லாத ஒரு தொழிலில் மோகம் கொண்டு திண்டாட முன் வருகிறார்களா, யோசித்துப் பாருங்கள்!

வாழ்வில் எது முக்கியம், எது சரியான வழி என்பதை நாம் நன்றாகப் புரிந்து கொள்ள வேண்டும். இன்றைய தொழில் நிர்வாகத்தில் மெத்தப் படித்தவர்கள் தொழிலில் வெற்றி பெறுவதன் இரகசியம் "எது முக்கியம்?" என்பதை உணர்வதுதான். அதைத்தான் ஆங்கிலத்தில் 'பிரையாரிட்டி' (Priority) என்று அடிக்கடி சொல்வார்கள். நீங்களும் 'எது முக்கியம்?' என்று நாலுமுறை சொல்லிப் பாருங்கள் - ஒரு வேலை தொடங்குவதற்கு முன்னால். கொஞ்சம் யோசித்துப் பாருங்கள்!

3

## கட்டுப்பாட்டைக் கற்றுக்கொள், தம்பி!

**1993** என்ற அருமையான ஆண்டு பிறந்திருக்கிறது. புத்தாண்டில் நாம் ஒவ்வொருவரும் ஒரு உறுதி எடுத்துக் கொள்கிறோம். சில தீர்மானங்கள் செய்து கொள்கிறோம்.

"இந்த ஆண்டு சொந்தத் தொழிலைத் தொடங்கப் போகிறேன்."

"இந்த ஆண்டு மேற்படிப்புக்காக வெளிநாடு செல்லப் போகிறேன்."

"இந்த ஆண்டு எனது கனவு வீட்டைக் கட்டப்போகிறேன்."

"இந்த ஆண்டு உலகம் புகழும் மகத்தான கதை ஒன்றை எழுதப் போகிறேன்."

"இந்த ஆண்டு அளவோடு சாப்பிட்டு கொடி போல உடலை வைத்துக் கொள்ளப் போகிறேன்."

இப்படி நாம் ஒவ்வொருவரும் ஒரு தீர்மானம் செய்கிறோம். நல்ல தீர்மானங்கள்! நல்ல நோக்கம்.

அடுத்த ஆண்டு தொடங்கும்போது பார்த்தோமானால் இதே தீர்மானங்களை மீண்டும் சொல்லிக்

கொள்கிறோம்! அதாவது இந்த ஆண்டு முழுவதும் நாம் எடுத்துக்கொண்ட குறிக்கோளில் நாம் முன்னேற வில்லை. அதை அடைய நாம் எதையும் சாதிக்க வில்லை. ஆங்கிலத்திலே சொல்வார்கள். "மீண்டும் முதல் படியில்!" என்று. முதல் படிக்கே திரும்பத் திரும்ப வந்தோமானால் நாம் எப்படி முன்னேறுவது?

ஒரு அமைச்சர் மரம் நட வந்தார். மரம் நட்டார். தண்ணீர் ஊற்றினார். ஒரு சந்தேகம் வந்தது. "நான் நடும் மரத்தை பத்திரமாக பாதுகாத்து வளர்ப்பீர்கள் அல்லவா?" என்று கேட்டார்.

"அதைப்பற்றிக் கவலைப் படாதீர்கள். ஒவ்வொரு ஆண்டும் எந்த அமைச்சர் வந்தாலும் இங்கேதான் நடுகிறார். நாங்கள் தண்ணீர் ஊற்றிக் கொண்டுதான் இருக்கிறோம்!" என்று சொன்னார்கள்.

எப்படிக் கதை!

செடி நடும்போது மாத்திரம் தண்ணீர் ஊற்றினால் எப்படி வளரும், செடி? எப்படி வளர்ந்து மரமாகும்?

இதுதான் பலருடைய கதை!

**வேகம் இல்லை!**

வெகு தீவிரமாக ஆர்வத்துடன் தீர்மானம் செய்கிறோம். வைராக்கியத்துடன் சொல்லிக் கொள்கிறோம். "நாளையிலிருந்து நான் புது மனிதன்!" என்று. ஓரிரு நாள் அந்த நினைப்பு நம்முடன் இருக்கிறது. ஆனால், நாம் தொடர்ந்து புது மனிதனாக ஆக, கவனத்துடன் இருப்பதில்லை. முதலில் இருந்த வேகம் இப்போது நம்மிடம் இருப்பதில்லை. ஆரம்ப சூரத்தனத்துடன் சரி. பிறகு முயற்சிகளை விட்டு விடுகிறோம்.

"இந்த ஆண்டு எம்.பி.ஏ. நிர்வாகப் படிப்பு படிக்கப் போகிறேன். அதுவும் தபால் மூலம் சொல்லித் தருகிறார்கள். நிர்வாகம் பற்றி படித்தால்தான் நாளை சொந்தத் தொழிலில் இறங்கலாம்'' என்று நல்ல தீர்மானம் எடுப்போம். அல்லது –

"தமிழ்நாடு இந்தியாவில் ஒரு மாநிலம். பதினாறு பெரிய மாநிலங்களில் ஒரு மாநிலம். பணம் புரள்வதெல்லாம் பம்பாயில், பஞ்சாபில், குஜராத்தில். எனவே நான் அங்கே போய் பல விஷயங்களையும் கற்றுக்கொள்ளப் போகிறேன். அவர்களுக்கு வேண்டியதை இங்கே தயார் செய்யப் போகிறேன்."

இப்படி ஒரு வியாபாரி தீர்மானம் செய்கிறார். ஆனால், அதில் அவர் முனைகிறாரா – தொடர்ந்து அதை முடிக்கிறாரா என்றால், அதுதான் இல்லை. திறந்த சோடா பாட்டில் போல பல ஆசைகளையும் தீர்மானங்களையும் புஸ்வாணமாக்கி விடுகிறோம்!

நாம் எங்கே தோற்றுப் போகிறோம்? எதனால் தோற்றுப் போகிறோம்?

நம்மிடம் சுய கட்டுப்பாடு இல்லை. தொடர்ந்த ஈடுபாடு இல்லை குறிக்கோள் கடைசிவரை நிற்பதில்லை. கண்காணிப்பு இல்லை. கவனம் வேறு எதில் எல்லாமோ சென்று நமது குறிக்கோளை திசை திருப்பி விடுகின்றன. நம் கனவெல்லாம் முயற்சி இன்றி, ஆர்வமின்றி, ஆற்றலின்றி, உழைப்பின்றி, மங்கி மடிந்துவிடுகிறது. இதுதான் குறிக்கோளை எட்டமுடியாததற்கு காரணம்.

**சுயக்கட்டுப்பாடு**

ஒரு பெரிய விருந்து நடந்தது. ஒரு நல்ல அறிஞரை அழைத்திருந்தார்கள். சாப்பிடுமுன்

அவரைப் பேசச் சொன்னார்கள். அவர் ஒரே ஒரு கேள்வியைக் கேட்டார். “நீங்கள் எல்லாரும் மனிதர்கள் போல சாப்பிட விரும்புகிறீர்களா? அல்லது மிருகங்கள் போல சாப்பிட விரும்புகிறீர்களா?”

“மனிதர்கள்! மனிதர்கள்!” என்றார்கள், அமர்ந்திருந்தவர்கள்.

அவர் சொன்னார்: “மிருகங்கள் தங்களுக்குப் போதுமென்று எண்ணியதும் சாப்பிடுவதில்லை! நிறுத்திக் கொள்கின்றன.”

அறிஞர் என்ன சொல்கிறார்?

மனிதன் தேவையினால் உந்தப்படுவதில்லை. ஆசையினால் உந்தப்படுகிறான்! தேவையினால் உந்தப்படுபவன் கட்டுப்பாடுடையவன். ஆசை என்பது மேலும் மேலும் வேண்டும் என்ற எண்ணத்தை வளர்ப்பது. ஆசைக்கு எங்கே முடிவு?

எனவேதான் சொல்லுகிறேன் - வாழ்வின் முக முக்கியமான பாடம் நாம் சுயக்கட்டுப்பாட்டைக் கற்றுக் கொண்டோமா என்பதுதான்.

உங்களை நீங்கள் கட்டுப்படுத்திக் கொள்ள முடியுமா? “காலையில் 5 மணிக்கு எழுவேன்” என்று சொல்வதிலிருந்து “வயிற்றை லேசாக வைத்துக் கொள்வேன், போட்டு அடைக்க மாட்டேன்” என்று சொல்வது வரை உங்களிடம் சுயக்கட்டுப்பாடு இருக்கிறதா? இதெல்லாம் நம் சொந்த விஷயங்கள். நாம் விரும்பினால் நடத்திக்காட்ட முடியும். நாம் மனது வைத்தால் செய்து காட்ட முடியும். நாம் பாடுபட்டால் இதையெல்லாம் நமது நல்ல பழக்கங்களாக ஆக்கிக் கொள்ள முடியும்.

சுயக்கட்டுப்பாடு இல்லாத மனிதன் தறிகெட்டு ஓடும் குதிரைக்குச் சமானம். அதேபோல சுயக்கட்டுப்பாடற்ற - சட்டங்களை மதிக்காத சமுதாயம், வாழத் தகுதியற்றது. முன்னாள் முதல்வர்களான பங்காரப்பா, கல்யாண்சிங் போன்றவர்கள் - சட்டத்தைக் காப்பாற்ற வேண்டிய வர்கள் - உச்சநீதி மன்றத் தீர்ப்பை மதித்தார்களா என்று யோசித்துப் பாருங்கள்.

**மவுன விரதம்**

மனதை மட்டுமல்ல, பேசுகின்ற வார்த்தை யையும் வாயையும் கட்டுப்படுத்த வேண்டுமென்று நமது ஞானிகள் எண்ணினார்கள். மகாத்மா காந்தி வாரத்தில் ஒருநாள் திங்கட்கிழமை மவுன விரதம் இருந்தார். அன்று யாருடனும் பேசமாட்டார். யோகி வேதாத்திரி அடிகள் ஆளியாறுக்கு அருகிலுள்ள அவரது ஆசிரமத்தில் ஆண்டொன்றுக்கு ஒரு மாத காலம் மவுன விரதம் இருப்பார். எதற்கு?

தன்னைத்தானே அடக்க, நாவை அடக்க, பேச்சை அடக்க, சுயமாகத் தன்னைப்பற்றி தானே சிந்தித்துப் பார்க்க.

நம் வீடுகளில் பெண்கள் பலர் திங்கட்கிழமை, சனிக்கிழமை, செவ்வாய்க்கிழமை என்று விரதம் இருப்பார்கள். அன்று முழு நாளும் சாப்பிட மாட்டார்கள். அல்லது ஒரு வேளை உணவு உண்பார்கள். கேட்டால் சோம வார விரதம், கந்த சஷ்டி விரதம் என்பார்கள். அமாவாசை, கிருத்திகை, பவுர்ணமி என்று விரதம் இருப்பவர்களும் இருக்கிறார்கள். என் தாய் திருவாதிரையன்று முதல் நாள் எதுவும் சாப்பிட மாட்டார்கள். மறுநாள் நடராசர் வீதியில் உலா வரும்போது (ஆருத்திரா

தரிசனம்) தரிசித்துவிட்டு திருவாதிரைக் களி என்ற உணவை சாப்பிடுவார்கள். மகாத்மா காந்தியின் தாய் தினமும் சூரியனைப் பார்த்து தரிசித்து விட்டுதான் உணவு உட்கொள்வார் என்றும் "அன்று சூரியன் தெரியாவிட்டால் அவர் பட்டினிதான்" என்றும் தன் தாயின் விரதத்தையும் மன உறுதியையும் பற்றி காந்தி தன் சுயசரிதையில் எழுதுகிறார்.

**விரதம் ஏன் ?**

ஏன் இந்த விரதங்கள்?

நம் உடலுக்கு ஓய்வு கொடுக்க. மேலே மேலே போட்டு வயிற்றை அடைத்து நாம் நம் உடலைத் துன்புறுத்துகிறோம். தேவையில்லாமல் உடலில் சதை போடுகிறது. கீழே குனிய முடியாமல் தொப்பை பெருக்கிறது. சரியான அளவு சாப்பிடும்போது உடல் சுறுசுறுப்பாக இயங்குகிறது. அதிக உணவு கொண்டால் அதிகம் சிந்திக்க முடிவதில்லை. தூக்கம் தான் நம்மை ஆட்கொள்கிறது.

விரதம் இருப்பவர்களது முகத்தைப் பார்த்திருக்கிறீர்களா? முகத்திலே ஒரு ஒளி இருக்கும், ஒரு அமைதி இருக்கும், ஒரு இனிமை இருக்கும்.

நம்மை நாமே கட்டுப்படுத்திக் கொள்ள உண்ணா நோன்பு போன்ற நல்ல பயிற்சி வேறில்லை.

இங்கேதான் நாம் ஒரு முக்கியமான விஷயத்தைக் கற்றுக்கொள்ள வேண்டும்; முதலில் புரிந்து கொள்ள வேண்டும். என்ன அந்த முக்கியமான விஷயம்?

சுயக்கட்டுப்பாட்டை சாப்பிடுவதில் கற்றுக் கொண்டோமானால், நாவை அடக்கக் கற்றுக் கொண்டோமானால், நம் வாழ்வின் முக்கியமான

எல்லா விஷயங்களில் கட்டுப்பாட்டைக் கொண்டுவர முடியும். நம் வாழ்வை மிகப் பிரமாதமாக வாழ முடியும்.

விரதங்கள் வழியே முதலில் நம் மனதைக் கட்டுப்படுத்துகிறோம்; பிறகு வாழ்வை ஒரு ஒழுங்கில் கொண்டு வருகிறோம். விரதம் இருப்பது "எல்லா வற்றிலும் என்னால் கட்டுப்பாடுடன் இருக்க முடியும்" என்கிற நம்பிக்கையை நம்முள் ஏற்படுத்துகிறது. இதன் விளைவாக நம் வாழ்வு நம் கைக்குள் - நாம் விரும்புகிறபடி அமைகிறது.

சுயக்கட்டுப்பாடு என்பது வாழ்வின் தேவையான அடிப்படைப் பழக்கம். முதலாவதாக கற்றுக் கொள்ள வேண்டிய பழக்கம்.

தியானம் நம் சிந்தனைகளை ஒகு கட்டுப் பாட்டிற்கு கொண்டுவருகிறது. விரதம் நமது செயல்களை ஒரு கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வருகிறது.

சுயக்கட்டுப்பாடு இருந்தால், ஒரு ஒழுங்கின் மூலம், வைராக்கியத்தின் மூலம் இந்தப் புத்தாண்டில் ஆசைப்படும் இலட்சியங்களை நிச்சயம் சாதனைகளாக மாற்றுவீர்கள்.

4

# நோன்பு இரு, தம்பி!

"கட்டுப்பாடு" என்பது நெறியான வாழ்க்கை. கட்டுப்பாடுடன் வாழ்பவர்கள், எண்ணங்களை நெறிப்படுத்திக் கொண்டவர்கள். எண்ணம் என்பது ஒரு சக்தி. எனவே, சக்தியை நெறுப்படுத்தி நாம் விரும்பும் திசையில் செலுத்தும்போது அது அந்த வேலைகளை செய்து முடிக்கிறது. இதுதான் பிரபஞ்ச உண்மை.

மாபெரும் சக்தி எண்ணங்களாக புறப்படும் இடம்தான் மனம். அதிலே பல ஆசைகள் தோன்று கின்றன. அந்த ஆசைகள் என்ற காட்டு வெள்ளத்தை நெறிப்படுத்தி ஆற்று நீராக எடுத்துச் சென்று பயன் படுத்துகிறோமே, அதைத் தான் கட்டுப்பாடு என்கிறோம்.

கட்டுப்பாடு உள்ளவர்கள் கோபம் அடைவதில்லை. பல விஷயங்களும் அவர்களுக்கு கோபத்தை ஊட்டுவது உண்மை. எனினும் அந்த கோபத்தை அடக்கி பொறுமையை கடைப் பிடிக்கிறார்கள், பெரியவர்கள் - அனுபவசாலிகள்.

கோபம் வரும்போது அவர்கள் வெடிப்ப தில்லை. சத்தம் போட்டுப் பேசுவதில்லை. திட்டுவ தில்லை. அவர்களது நரம்பு புடைப்பதில்லை. முகம் கறுப்பதில்லை. கோபம் வரும்போது அதை அடக்கிப் பொறுமையுடன் பேசுகிறார்கள். தவறு நிகழ்ந்திருக் கிறது என்றால் அதைப் பொறுமையுடன் சுட்டிக் காட்டுகிறார்கள். நிதானத்தை கடைப்பிடிக்கிறார்கள்.

மாறாக, கோபம் வரும்போது நாம் வேகமாகத் திட்டுகிறோம், கண்டபடி பேசுகிறோம் என்று வைத்துக் கொள்ளுங்கள். என்ன ஆகும்?

நாம் கோபத்துடன் திட்டும்போது கொஞ்ச நேரத்தில் எதிரியும் கோபமடைவான். தவறு செய்தவன் தவறை ஒப்புக் கொள்வதற்குப் பதில் தவறுக்கு சமாதானம் கூறுவான். சரிக்குசரி சமானமாகப் பேசுவான்.

அதாவது கோபம், கோபத்தைத்தான் உண்டு பண்ணும். பொறுமை எதிரியிடமும் பொறுமையை உண்டுபண்ணும். மரியாதையுடன் எதிரி நடந்து கொள்கிறான்.

கோபம் எல்லை மீறும்போது வன்முறைக்கு இட்டுச் செல்கிறது. மாறாக பொறுமை நம்மைக் கட்டுப்படுத்தி, அன்பு நிலைக்கு அழைத்துச் செல்கிறது. சுய கட்டுப்பாடு தரும் பாடம், இது.

## எப்படி அடக்குவது ?

கோபத்தை எப்படி அடக்குவது? இதற்கு பயிற்சி தேவை. இந்தப் பயிற்சிகளை பலமுறை திரும்பத் திரும்ப செய்ய வேண்டும். அப்போதுதான் பலன்தரும்.

கோபமாயிருக்கும்போது "நான் கோபமா யிருக்கிறேன்!" என்று சொல்லிப் பாருங்கள். ஒரு மூன்றாவது மனிதன் நம்மைப் பார்ப்பது போல "ஓகோ! இந்த குப்புசாமியாகிய நான் கோபமா யிருக்கிறேனா? அதனால்தான் இப்படிப் பேசுகிறேனா? அதனால்தான் இந்தக் கதவை இப்படி காலால் உதைக்கிறேனா?" என்று உங்களுக்கு நீங்களே விளக்கம் கொடுத்துக் கொள்ளுங்கள். நமக்கே நம் மீது சிரிப்பு வரும். சிரிப்பு வரும்போது கோபம் அடங்கி விடும்.

நாம் கோபத்தில் உதிர்த்த வார்த்தைகள் திரும்பிப் பெற முடியாதவை. அவை பிறர் மனதில் ஆறாத வடுக்களை ஏற்படுத்திவிடும். நம்மைப் பற்றிய கெட்ட எண்ணத்தை பிறர் மனதில் உருவாக்கிவிடும்.

எனவேதான் வார்த்தைகளை லிட்டர் அல்லது மீட்டர் என்று வைத்துக்கொண்டு, அளந்து பேசுவது நல்லது. அல்லது படிக்கல் வைத்துக் கொண்டு எடை போட்டுப் பேசுவது நல்லது.

மற்றொரு பயிற்சி கோபத்தின் விளைவுகளை எண்ணிப் பார்ப்பதாகும். கோபப்படுவதன் மூலம் ஒரு நண்பனை நாம் இழந்து விடுகிறோம்.

இரண்டாவதாக, நம் கோபம் அடங்கியவுடன் நமக்கே நம் மீது வெட்கம் ஏற்படுகிறது இப்படிக் கோபத்தைக் கொட்டி விட்டோமே என்று.

மூன்றாவதாக, எதிரி கோபப்படும்போது நாம் பதிலுக்குப் பேசவில்லை என்றால், எதிரி தன் வசமுள்ள கருவிகளை எளிதில் இழந்து விடுகிறார். சற்று நேரத்தில் அவரே இறங்கி வருவதைக் காணலாம்.

நான்காவதாக நாம் பேசுவது உண்மையாக இருக்கலாம். உண்மை என்பதற்காக எல்லாவற்றையும்

சொல்ல வேண்டும் என்பதில்லை. 'உண்மை சொன்னான்' என்பதற்காக யாரும் உங்களை மெச்சப் போவதில்லை. எனவே அந்த நேரங்களில் பேசாமல் இருப்பதனால் ஒன்றும் குடிமுழுகிப் போய் விடுவதில்லை.

**வேண்டாத புகழ்ச்சி!**

கட்டுப்பாடு என்பது கோபத்தைக் கட்டுப் படுத்த மட்டுமே பயன்படுத்த வேண்டிய கருவி அல்ல. புகழ்வதைக் கூட கட்டுப்படுத்த உதவும். உங்களை உயர்த்த உதவும்.

சில ஆண்டுக்குமுன் ஒரு கூட்டத்திற்குப் போயிருந்தேன். தெரியாமல் போய்விட்டேன். இப்படி நடக்கும் என்று தெரிந்திருந்தால் போயிருக்க மாட்டேன்.

அன்று அப்போதிருந்த முதல்வர் எழுதிய ஒரு புத்தகம் வெளியிட்டார்கள். பேச வந்தவர்கள் புலவர்கள், தொழிலதிபர்கள், பல்கலைக்கழகத் துணை வேந்தர்கள் நான்கு பேர்.

முதல்வரை 'இந்திரன்' என்றார்கள். "சந்திரன்' என்றார்கள். எழுத்தை 'தேவாமிருதம்' என்கிறார்கள். "கரைத்துக் குடித்தேன், தினந்தோறும்" என்றார்கள். "அவர் எழுதிய நூலைத்தான் வேத புத்தகமாக பாராயணம் செய்கிறேன்" என்றார்கள். அந்த நாவலை தினமும் வயலில் சென்று படித்தபோது "பயிர் வளர்ந்தது" என்றார்கள். "அறுவடை அதிகமாயிற்று" என்றார்கள். "மழை பெய்தது, புத்தகத்தை தூக்கி உயரே வானில் காட்டினால்" என்றார்கள்.

என்னால் தலையில் அடித்துக்கொள்ள முடியவில்லை. எழுந்து வெளி வருவதும் பண்புக்

குறைவு. தலையைக் குனிந்து கொண்டு உட்கார்ந்திருந்தேன்.

அவர் முதல்வராக இல்லாவிட்டால் - பதவியில் இல்லாவிட்டால், இப்படி தலையில் தூக்கி வைத்துக்கொண்டு கொண்டாடுவார்களா?

இரண்டாவது வெட்கக் கேடான விஷயம், புகழ்வதும் பாராட்டுவதும் பொய் என்பது பாராட்டிப் பேசுபவருக்கும் தெரியும். இப்படித் தெரிந்தே பாராட்டிப் பேசியவர்கள் தங்களுக்கு சில ஆதாயம் வேண்டி தங்களையும் வந்த எல்லோரையும் ஏமாற்றிக் கொண்டிருந்தார்கள்! அதனால்தான் ஒரு சங்ககாலப் புலவன் சொன்னான் -

"பெரியோரை வியத்தலும் இலமே சிறியோரை இகழ்தல் அதனிலும் இலமே" என்று.

பெரியோரை ''ஆகா ஓகோ!'' என்று புகழவும் மாட்டோம். சிறியவர்களை கேவலமாக இகழ்ந்து பேசவும் மாட்டோம் என்று சொல்கிறான் அந்த சங்க காலப் புலவன்.

இன்று அரசியல்வாதிகளும் அறிஞர்களும் என்ன செய்கிறார்கள்? பதவியில் இருப்பவர்களை புகழ்வதையும், எதிர்கட்சிக் காரர்களை மேடையிலே கேவலமாகத் திட்டுவதையும்தான் செய்கிறார்கள். இவர்கள் பெரியவர்களானாலும் சரி - சிறியவர்களானாலும் சரி ஒரு நிதானத்துடன் அணுகுவது எத்தனை நல்ல பண்பாடு என்பதை உணர வேண்டும்.

## இதுவும் ஒரு வாழ்வா ?

உடம்பு சரியில்லாதவன் ஒருவன் டாக்டரிடம் போனான். டாக்டர் சோதித்துப் பார்த்தார். "நீ சிகரெட்டு புகைப்பதுண்டா, மது அருந்துவதுண்டா?

கண்ட பெண்களுடனும் பொழுதைக் கழிப்பதுண்டா?" என்று கேட்டார்.

அவன் "ஆம்! ஆம்! ஆம்!" என்று சொன்னான்.

"நீ அவற்றை விட்டால்தான் உயிர் பிழைக்கலாம்" என்றார் டாக்டர்.

வந்தவன் கேட்டான் "இதை எல்லாம் விட்டு விட்டு வாழ்ந்து என்ன அனுபவிக்கப் போகிறேன்?"

சிகரெட்டு அவனது நுரையீரலை அரித்து விட்டது. மது அவனுடைய மூளையை சிதைத்து விட்டது. பெண்கள் விஷயம் அவன் உடலைப் பாதித்து விட்டது. வாழ்ந்தான், நோயாளியாக; செத்துப் போனான் சில நாளில்.

வாழ்வில் எது முக்கியம் என்பதை உணராமலே அவன் வாழ்வை முடித்துக் கொண்டான். கட்டுப்பாடு இல்லாதவர்களின் கதி அவன் கதிதான்.

கட்டுப்பாடுடன் நடந்து கொள்ளும்போது நாம் நம்மைப்பற்றி பெருமைப் படுகிறோம்.

சின்னச்சின்ன விஷயங்களில் முதலில் கட்டுப் பாட்டுடன் இருங்கள். சின்னச்சின்ன விஷயங்களின் கட்டுப்பாட்டைக் கற்றுக்கொண்ட பிறகு பெரிய பெரிய விஷயங்களில் கட்டுப்பாட்டைக் கொண்டு வருவது சுலபமாக இருக்கும்.

விரதமும் நோன்பும் கட்டுப்பாட்டைக் கற்றுத் தரும் பயிற்சிகள்தான். அத்துடன் உள்ளத்தில் ஒரு தெய்வீக - புனித உணர்வையும் அவை எழுப்புகின்றன. விரதமும் நோன்பும் உடலுக்கும் நல்லது; உள்ளத்திற்கும் நல்லது.

5

## இரகசியம் தெரிந்துகொள் தம்பி!

இப்போது சில இரகசியங்களை கவனிப் போம்.

இந்த இரகசியங்களை இத்தனை நாள் மேல் மட்டத்து மனிதர்களும் விஷயம் தெரிந்தவர்களும் தான் பயன்படுத்தி வந்தார்கள். இந்த விஷயங்கள் படிப்பில்லாதவர்களுக்கும், ஏழைகளுக்கும் கிடைக்க வில்லை. காரணம் - "அடி மட்டத்து மக்கள் ஆர்வம் இல்லாதவர்கள். அதனால் அவர்கள் தெரிந்துகொள்ள வில்லை" என்று சொல்கிறார்கள்.

ஆனால், இந்த விஷயங்களை எல்லாரும் தெரிந்து கொள்ள வேண்டும். அவற்றில் மந்திரசக்தி இருக்கிறது. உங்களையும் உங்கள் சந்ததிகளையும் உயர்த்தக்கூடிய வலிமையும் மந்திரசக்தியும் கொண்டது இந்த விஷயம்.

எனவே கவனமாக மேலே படியுங்கள்.

### இராமானுசர்

வைணவ ஆசாரியார்களில் ஒருவரான இராமானுசர் மந்திர சக்தியை அடைய திருக்

கோட்டியூர் என்ற ஊருக்கு செல்கிறார். அங்கே நம்பி என்ற அறிஞர் இருந்தார். அவர் பெரிய மகான். இராமானுசர் அவர் காலில் விழுந்து வணங்கினார். மந்திர உபதேசம் செய்யுமாறு வேண்டினார்.

சாதாரணமாக மந்திரங்களை எல்லாருக்கும் சொல்லிக் கொடுக்க மாட்டார்கள். மந்திர உபதேசம் செய்யச்சொல்லி 18 முறை அணுகினார் இராமானுசர். நம்பியின் மனம் இறங்கவில்லை.

இராமானுசரின் வருத்தத்தைக் கண்ட நம்பி அவரிடம் சொன்னார் – "இந்த மந்திரத்தின் மகிமை பலருக்கு தெரியாது. நீ திரும்பத் திரும்ப வந்து இந்த மந்திரத்தைக் காப்பாற்றுவதாக சொல்வதால் உன்னிடம் சொல்கிறேன். இதை வேறு யாருக்கும் கூறாதே" என்று கூறி, அந்த "எட்டு எழுத்து" மந்திரத்தை அவருக்கு உபதேசித்தார்.

மந்திரத்தை மனதுக்குள் சொல்லத் தொடங்கியவுடன் இராமானுசர் மனதில் ஒரு சாந்தியும் அமைதியும் இன்பமும் தோன்றின. ஒரு தெய்வீக சக்தி தன்னை ஆட்கொண்டதை இராமானுசர் உணர்ந்தார்.

திருக்கோட்டியூர் நம்பியிடமிருந்து விடை பெற்று, இராமானுசர் திருவரங்கத்திற்கு புறப்பட்டார். திடீரென்று அவருக்கு ஒரு அதிசய எண்ணம் உண்டாயிற்று.

"இவ்வளவு பெரிய கருவூலமான இந்த தெய்வீக ஞானத்தை எல்லாருக்கும் கொடுத்தால் எவ்வளவு பேர் பயனடைவார்கள். இதனால் எவ்வளவுபேர் வாழ்க்கையின் சிக்கல்களிலிருந்து மீள்வார்கள்" என்ற எண்ணம் அவர் மனதில் ஓடியது.

இப்படி எண்ணியதும் அவரது ஆனந்தம் அதிகமாயிற்று.

## எட்டெழுத்து மந்திரம்

"எல்லாரும் கோவிலுக்கு வாருங்கள். உங்களுக்கு விலைமதிப்பற்ற கருவூலம் ஒன்றைத் தருகிறேன்" என்று சொன்னார். நகருக்கு ஒரு மகான் வந்திருப்பதாகவும், அவர் கேட்டதையெல்லாம் கொடுப்பதாகவும் செய்தி ஊரில் வெகு வேகமாகப் பரவியது.

சிறிது நேரத்தில் ஏராளமான பேர் அங்கே கூடினார்கள்.

இராமானுசர் கோபுரத்தின் உச்சியில் ஏறினார். கூட்டத்தை நோக்கிப் பேசலானார்.

"சகோதர சகோதரிகளே! இவ்வுலகின் துன்பங்களிலிருந்தும் வேதனைகளிலிருந்தும் விடுதலை பெறுங்கள். நிரந்தர இன்பத்தையும் வலிமையையும் தரும் ஒரு மந்திரத்தை நான் உங்களுக்கு சொல்லப் போகிறேன். இது மகா மந்திரம். இதை என்னுடன் சேர்ந்து எல்லாரும் மூன்று முறை உச்சரியுங்கள்" என்று சொல்லி அந்த "எட்டெழுத்து மந்திரத்தை" உபதேசித்தார்.

பசித்தவன் உணவைக் கண்டதுபோல - வறண்ட பயிர் தண்ணீரைக் கண்டது போல - எல்லாரும் அதை உரக்க உச்சரித்தார்கள்; புளகாங்கிதம் அடைந்தார்கள்.

இப்படி நடந்ததை கேள்விப்பட்டார் குரு. அவருக்கு தாங்கமுடியாத கோபம் வந்தது. மகா மந்திரத்தை ஊரிலுள்ள எல்லாருக்கும் இராமானுசர் சொல்லிக் கொடுத்ததைக் கேட்டு மனம் பதைத்தார்.

"நீ என்னை மோசம் செய்து விட்டாய்! மந்திரத்தை எல்லாருக்கும் சொல்லிய நீ நரகத்திற்குப் போவாய்!" என்று சாபம் கொடுத்தார்.

இராமானுசர் மனம் நொந்து தன் குருவிடம் சொன்னார் - "ஐயா! இந்த மந்திரத்தைச் சொல்பவர்கள் உயர்ந்த பாக்கியத்தை அடைவார்கள் என்று சொன்னீர்கள். எனவே, நான் ஒருவன் நரகத்திற்குப் போனாலும் ஆயிரமாயிரம் மக்கள் இதனால் உயர்ந்த நிலை அடைவார்களே. அதனால் தான் அவர்களுக்கு இதை உபதேசித்தேன்!" என்று மனம் உருகிக் கூறினார்.

இராமானுசர் தனக்கென வாழாத வள்ளல் என்பதை குரு உணர்ந்தார். பின் சமாதானமடைந்தார்.

அத்தகைய மந்திரத்தைக் கற்றுக் கொண்டு தினமும் அதை சொல்வதும் தியானிப்பதும் மனதிற்கு மகத்தான வளமை தரும். மிகுந்த அமைதியையும் நிறைவான இன்பத்தையும் தரும்.

அதை கொஞ்சம் விரிவாகப் பார்க்கலாம்.

## ஞானவழி

மனதைக் கட்டுப்படுத்தும் மார்க்கத்தைத் தான் "ஜபம்" "தியானம்" என்கிறோம். ஞான மார்க்கம் என்கிறோம்; மூச்சை அடக்கி சீர்படுத்தும் வழி முறைகளை "பிராணாயாமம்" என்கிறோம். உடலை நெறிப்படுத்தும் ஆசனங்களை "யோகங்கள்" என்கிறோம்.

இவற்றை எல்லாம் தெரிந்து கொண்டோமானால் நாம் ஒரு மேலான வாழ்க்கையை வாழலாம். அற்புதமான வாழ்வை வாழலாம். உலகில் நாம் விரும்பியதை அடையலாம். 'நமது வாழ்வின் பயன்

என்ன? நாம் ஏன் பிறந்திருக்கிறோம்?' என்பதைப் புரிந்து கொள்ளலாம்.

நெடுநாளாக இத்தகைய அறிவு எல்லாருக்கும் கிடைப்பதாயில்லை. ஒரு சில மகரிஷிகள், ஒரு சில யோகிகளுக்குத்தான் இதன் வழிமுறைகள் தெரியும். அவர்களும் காடுகளிலும் மலைகளிலும் வசித்தார்கள். தெரிந்துகொள்ள நாமும் காட்டுக்கு போய்க் கற்றுக் கொள்ள வேண்டும்; காடுகளில் அவர்களுடன் சுற்ற வேண்டும்.

யோகிகளுக்கு அடுத்தபடியாக நமது நாட்டில் இவற்றை எல்லாம் பிராமண சமூகத்தினர் அறிந்து வைத்திருந்தார்கள். ஜெபம், தியானம் செய்வதை அவர்களின் குழந்தைகளுக்கு 10-12 வயதில் சொல்லிக் கொடுத்தார்கள். இப்படி சொல்லிக் கொடுப்பதை பூணூல் போடும் சடங்காக செய்வார்கள். அவர்களும் கூட இதை பெண்களுக்கு சொல்லிக் கொடுப்பதில்லை.

காலம் செல்லச் செல்ல, பிற சாதியினரிடை யேயும் இதை அறிந்து கொண்ட மகான்கள் தோன்றினார்கள். இவர்கள் இதைப் பரப்ப மடங்களை ஏற்படுத்தினார்கள். தருமபுரமடம், திருவாடுதுறை மடம், திருப்பனந்தாள் மடம் என்று பல மடங்களாக உருவெடுத்தன.

தமிழ் நாட்டில் பரஞ்சோதி மகான் என்றொரு யோகி இருந்தார். பிறப்பால் அவர் முஸ்லிம். அவருடைய சீடர்களாக இன்று பலர் யோக மார்க்கத்தை சொல்லிக் கொடுக்கிறார்கள்.

இலங்கையில் "யோக சுவாமி" என்பவர் இருந்தார். அவருடைய சீடர்தான் ஹாவாயியில் என்று இருக்கும் சுப்பிரமுனிய சுவாமிகள்.

இவர்கள் காட்டும் வழி என்ன?

வாழ்க்கைக்குப் பயன்படுமா?

**மனோசக்தி**

எப்படி மின்சாரத்தைப் பற்றிப் படித்து மின்சார விசிறியும், மின்சார ரெயிலும் ஓட்டு கிறோமோ, அதைப்போல மனதைக் கட்டுப்படுத்தும் மார்க்கங்கள் கற்றுக்கொண்டோமானால், நம் மனோசக்தியின் மூலம் நாம் விரும்பும் பல்வேறு காரியங்களை சாதிக்கலாம்.

நமது நாட்டில் பலர் ஏழைகளாயிருப்பதற்கும், சிலர் சுகமாக எல்லா வசதிகளுடனும் வாழ்வதற்கும் காரணம், அவர்கள் படிப்பில்லாமல் இருக்கிறார்கள் என்பதுதான்.

அந்தப் படிப்பைப் பெற்றவர்கள்கூட படிப்பிலே எது முக்கியம் என்று தெரிந்து கொள்வதில்லை. அந்த முக்கியமான விஷயம்தான் தியானம். இன்று அமெரிக்காவில் பல பல்கலைக் கழகங்களில் இது சொல்லிக் கொடுக்கப்படுகிறது. ஊருக்கு ஊர் தியானம் சொல்லிக் கொடுக்கும் சங்கங்கள் இருக்கின்றன.

ஒரு மனிதன் செல்வந்தனாக இருப்பதற்கும் மற்றொருவன் ஏழையாக வாழ்வதற்கும் காரணம், அவர்கள் மனதில் கொண்டிருக்கும் எண்ணங்கள் - ஆசைகள்தான் என்று மனவியல் அறிஞர்கள் கூறுகிறார்கள். அதேபோல அந்த ஆசைகளை எப்படி சீர்படுத்தி வாய்க்கால் வெட்டி, பாத்தி கட்டி செலுத்துகிறோம் என்பது அதைவிட முக்கியம். இதைத்தான் மனதை ஒருமுகம் படுத்துதல் என்பார்கள்.

பூதக் கண்ணாடியை பார்த்திருப்பீர்கள். கீழே ஒரு தாளை வைத்து பூதக் கண்ணாடியை சூரியனுக்கு எதிராகப் பிடித்தால், சூரியக் கதிர்கள் ஒருமுகப்பட்டு சிறிது நேரத்தில் தாள் எரியத் தொடங்குகிறது. பூதக் கண்ணாடி சூரிய சக்தியை ஒருமுகப்படுத்துகிறது. ஒருமுகப்படுத்தும்போது சக்தி அதிகமாகிறது. வலிமை- எரிக்கும் சக்தி அதிகமாகிறது.

இப்படி நம் மனசக்தியை ஒருமுகப்படுத்தும் மார்க்கங்களைத்தான் 'ஜெபம்' என்றும் 'தியானம்' என்றும் சொல்கிறோம். உதடுகள் அசைந்து ஒலியுடன் சொல்வதை 'ஜெபம்' என்றும், மனதிற்குள் எண்ணங்களை அடக்குவதை 'தியானம்' என்றும் சொல்கிறோம். யோகிகள் மனதை ஒருமுகப்படுத்த சில மந்திரங்களை இரகசியமாக சொல்லிக் கொடுப் பார்கள். எந்த எண்ணமும் மனதிற்குள் இரகசியமாக வைக்க வைக்க, அதற்கு வலிமை அதிகமாகிறது. இதுதான் இரகசியமாக சொல்வதன் காரணம்.

**மந்திரம்**

மந்திரம் என்று எதைச் சொல்கிறார்கள்? "ஓம் நமசிவாய" என்று சைவர்கள் சொல்வார்கள். "ஓம் நமோ நாராயண" என்று வைணவர்கள் சொல்வார்கள். "மணி பத்மே ஹம்" என்று புத்த மதத்தினர் சொல்வார்கள்.

"ஓம்" என்ற வார்த்தை மந்திரங்களிலே உயிர் போன்றது. 'ஓம்' என்ற நாதம் இந்த பிரபஞ்சம் எழுப்புகின்ற உயிர் ஒலி. அதை நாம் சொல்லும் போது அந்த பிரபஞ்ச மூலத்துடன் நம்மை ஐக்கியப் படுத்துகிறது. வானொலிப் பெட்டியில் திருச்சியைத் திருப்ப ஒரு குறிப்பிட்ட ஒலி அலையில் நாம் முள்ளை வைத்தோமானால்தான் திருச்சி நிகழ்ச்சியை நாம்

கேட்க முடியும். அதேபோல பிரபஞ்ச மூலத்துடன் ஐக்கியமாக, அதனுடன் தொடர்புகொள்ள இந்த 'ஓம்' என்ற மந்திர ஒலியை எழுப்பினால்தான் முடியும்.

'ஓம்' அத்தகைய வலிமை வாய்ந்ததா, உண்மை தானா என்றெல்லாம் ஆராய்ந்து கொண்டிருக்கத் தேவை இல்லை. இன்று உலகில் சிறந்த ஹார்வர்டு பல்கலைக் கழக பேராசிரியர்கள், அறிஞர்கள் எல்லாருமே இதை அறிவியல் முறையில் ஏற்றுக் கொள்கிறார்கள்.

இன்று நம் வேலை, அதை பயன்படுத்தக் கற்றுக் கொள்வதுதான். 'நமசிவாய' என்று சைவர்கள் சொல்லும் மந்திரம் மனதை அமைப்படுத்துகிறது. "சிவபெருமானே, உன்னை வணங்குகிறேன். எனக்கு வழிகாட்டு" என்று பொருள்படும் வாசகம் அது.

**ஆழ்மனம்**

திரும்பத் திரும்பச் சொல்வதுதான் மந்திர சக்தியை ஏற்படுத்துகிறது. எதைத் திரும்ப சொல்கிறோமோ அதன் பொருள் நம் ஆழ்மனதில் பதிந்து நமக்கு எப்போதும் அந்த மந்திர சக்தி உதவத் தயாராயிருக்கிறது.

"வழிகாட்டு" என்று முறையிட்டோமானால் நமக்கு வழிகிட்டும். அதனால்தான் ஏசுபிரான் -

**"கேளுங்கள் கொடுக்கப்படும்**
**தட்டுங்கள் திறக்கப்படும்**
**தேடுங்கள் கிடைக்கும்"**

என்றார்.

திரும்பத் திரும்ப சொல்வதன் மூலம் விஷயங்கள் ஆழ்மனதிற்குப் போகின்றன. ஆழ்மனதில்

போடப்பட்ட விஷயங்களை ஆழ்மனம் நிறைவேற்றி வைக்கிறது. இதுதான் உண்மை.

முன்னூறு ஆண்டுக்கு முன் வாழ்ந்த பிரான்சு நாட்டு மருத்துவர் ''நான் ஒவ்வொரு நாளும், ஒவ்வொரு வகையிலும் முன்னைவிட ஆரோக்கிய மானவனாக இருக்கிறேன்'' என்று நோயாளிகள் திரும்பத் திரும்பச் சொல்லச் செய்ததன் மூலம் அவர்களது நோயைக் குணப்படுத்தினார். இது இன்னும் "நமக்கு நாம் சொல்லிக் கொள்ளுதல்" என்ற தத்துவத்தின் கீழ் மருத்துவர்களால் பயன்படுத்தப் படுகிறது.

இப்படியாக மனதை ஒருமுகப்படுத்தும் பழக்கந்தான், நாளைக்கு நாம் ஒரு வேலையைச் செய்யும்போது மனதை அந்த விஷயத்தில் ஒருமுகப் படுத்துவது எளிதாகிறது. இதனால் முயற்சிகள் வெற்றி யடைகின்றன.

ஜெபம் - தியானம் மூலம் மனதை ஒருமுகப்படுத்தும் திறனையும், நம் ஆசைகளை, இலட்சியங்களை - ஆழ்மனதிற்கு அனுப்பி வைக்கும் முறையையும் கற்றுக் கொள்கிறோம்.

சுய கட்டுப்பாட்டின் முக்கியமான பாடம் இதுதான். இதை விடாது நீங்கள் பயிற்சி செய்து பார்த்தீர்களானால், அதி ஆச்சரியமான நிகழ்ச்சிகள் உங்கள் வாழ்வில் நேர்வதைப் பார்ப்பீர்கள்; வெற்றி உங்கள் கைக்குள் வந்து சேரும். இதுவே இத்தனை நாள் அதிகம் பேருக்கு சொல்லிக் கொடுக்கப்படாத இரகசியமாக இருந்தது!

# 6

## ஏமாற்றிக் கொள்ளாதே தம்பி!

முல்லாவின் நண்பர்கள் ஒரு சமயம் அவரைச் சூழ்ந்துகொண்டு 'விருந்து கொடு' என்றார்கள். வாருங்கள் வீட்டுக்கு என்று அழைத்துச் சென்றார் முல்லா. வீடு வந்ததும் "இருங்கள் வெளியே, மனைவியிடம் கேட்டுவிட்டு வருகிறேன்" என்று உள்ளே போனார்.

"விருந்துக்கு நண்பர்கள் வந்திருக்கிறார்கள்" என்று முல்லா சொல்ல, முல்லாவின் மனைவி, ஆடினாள், பாடினாள்; முல்லாவை பழமுறம் கொண்டு அடிக்காத குறைதான்.

"ஐயோ எப்படிச் சொல்வேன், வெளியில் நிற்கும் நண்பர்களிடம்!" என்று கையைப் பிசைந்தார் முல்லா. "நான் பார்த்துக் கொள்கிறேன்" என்று சொல்லிவிட்டு வெளியே வந்தாள், முல்லாவின் மனைவி.

"ஏன் நிற்கிறீர்கள்?"

"முல்லா விருந்து தருவதாகச் சொல்லி எங்களை அழைத்து வந்தார்!"

“முல்லா வீட்டில் இல்லை!”

“நாங்கள்தான் பார்த்தோமே, வீட்டில் நுழைவதை!”

“இல்லை”யென்று முல்லாவின் மனைவி உறுதியாகச் சொல்ல, அவருடைய நண்பர்கள் “உள்ளே இருக்கிறார்” என்று சொல்ல, வாக்குவாதம் நீடித்தது. உள்ளே இருந்த முல்லாவுக்குக் கோபம் வந்தது. வெளியே வந்தார்.

“உங்களுக்கு மூளை இல்லை? கொல்லையிலே கதவு இருக்கிறதென்று தெரியாது? கொல்லைப் பக்கக் கதவு வழியே நான் வெளியே போயிருக்கலாமில்ல!” என்றார்.

முல்லாவைப் போலத்தான் நம்மில் பலர் தோல்வியை ஒப்புக் கொள்வது இல்லை. தோல்வியை மறைக்க முயற்சி செய்கிறோம். தோல்வி வந்தால், கோபப்படுகிறோம். தோல்வியைக்கூட “ஒரு வகையில் வெற்றிதான்” என்று சொல்லிக் கொள்ளுகிறோம்.

**ஏமாற்ற வேண்டாம்!**

இதெல்லாம் நம்மையும் மற்றவர்களையும் ஏமாற்றிக் கொள்வது ஆகும். “ஆம்! தோற்றுப் போனோம்! எனினும் மனம் கலங்கவில்லை!” என்று சொல்லித் தோல்வியை ஏற்றுக் கொள்ளும்போது தான் தோல்வியின் உண்மையான காரணம் நமக்குப் புரியும். தோல்வியின் காரணம் புரிந்தால்தான் அடுத்த முறை அந்தத் தவறை மீண்டும் செய்ய மாட்டோம்.

தோல்விக்கு நாம் பொறுப்பேற்கிறோம். ஆனால், நாம் குற்றவாளி அல்ல! தவறான முடிவு எடுத்துவிட்டோம்! அவ்வளவுதான்.

இன்றிருக்கும் பல சினிமா நட்சத்திரங் களையும் இதற்கு முன்பு திரை உலகில் இருந்தவர் களையும் கொஞ்சம் நினைத்துப் பாருங்கள். ஒரு படம் நன்றாக ஓடும்; வெற்றி பெற்று பணம் குவிக்கும். அடுத்த படம் ஓடாது. அதற்கு அடுத்த படம் வெற்றி பெறும். வெற்றியும் தோல்வியும் இப்படிப்பட்டதுதான்.

ஒரு மாணவன் இருக்கிறான். அவன் காலாண்டுத் தேர்வில் வகுப்பில் முதலிடம் பெறுகிறான். அடுத்த தேர்வில் இரண்டாவது இடத்துக்குப் போய்விடுகிறான். பிறகு முழு மூச்சுடன் முயன்று படித்து மீண்டும் முதலிடத்தைப் பிடித்துக் கொள்ளுகிறான்.

அதுபோல, வெற்றி நிரந்தரமல்ல; அதிர்ஷ்டம் தொடர்கதை அல்ல! தோல்வியும் நிரந்தரமல்ல!

## நம் கையில் உள்ள சக்தி

நம் கையில் இருக்கும் சக்தி நமது முயற்சிதான். தோல்வியைப் பின்னுக்குத் தள்ளிவிட்டு மீண்டும் முயல வேண்டும். வாழ்க்கை என்பது ஒரு தொடர்ந்த போராட்டம். ஒரு தொடர்ந்த முயற்சி.

"தம்பீ! வாழ்க்கை எப்போதுமே மேலே மேலே 90 டிகிரி கோணத்தில் ஏற்றம் போல ஏறிக் கொண்டிருக்கும்'' என்று யார் சொன்னார்கள்? யாரும் நமக்கு இந்த பாதுகாப்பை உறுதிமொழியை அளிக்கவில்லை!

நாளைக்கு ஒரு தொழில் தொடங்குகிறீர்கள். "போட்ட முதல் திரும்பி வருமா? ஆதாயம் கிடைக்குமா? ஆதாயம் போகட்டும். தொழிலே நஷ்டத்தில் ஓடி, நாம் தெருவில் நிற்க நேரிடுமா?'' என்ற பயம் யாருக்கும் வராமல் போகாது.

பால்கெட்டி என்ற பிரபல செல்வந்தரிடம் ''ஐயா! நீங்கள் அதிர்ஷ்டசாலி. எதில் பணம் போட்டாலும் அது பத்துப் பங்காகத் திரும்பி வருகிறது!'' என்று பாராட்டிப் பேசியபோது, "அட, நீங்கள் ஒன்று! போட்ட சட்டை பத்திரமாக வருமா என்று நான் யோசித்துக் கொண்டிருக்கிறேன்'' என்பார்.

வெற்றி பெற, என்ன செய்கிறார் மனிதர் - பால்கெட்டி? எங்கெல்லாம் தவறிப் போய்விட - தோற்றுப்போய்விட - வழி இருக்கிறதோ அதைப் பார்த்து - அந்த ஓட்டையை எல்லாம் ஒவ்வொன்றாக அடைக்கிறார். அந்த கவனம், அந்த கண்காணிப்பு, அந்த அக்கறை வேண்டும் நமக்கு.

## என் அனுபவம்

அடுத்து, சிலநேரம் நாம் வெகுவாக முயற்சித்திருப்போம். எனினும் எல்லா முயற்சி களையும் மீறி தோற்றுப் போயிருப்போம்.

நான் சென்னைக்கு சென்று, மேல்படிப்பு படித்தேன். என் படிப்பு முடிந்ததும், முன்பு வேலை பார்த்த கும்பகோணத்தில் எனக்கு வேலை தராமல் சென்னையில் போட்டார்கள்.

கும்பகோணம் எனக்குப் பழகிய ஊர். என் பெற்றோர் இருக்கும் இடத்திற்கு அருகிலுள்ள ஊர். என் பெற்றோரோ வயதானவர்கள். சென்னையோ எனக்குப் பிடிக்காத ஊர்! ''ஒரே ஜேப்படிக் காரர்களால் நிறைந்த ஊர்'' என்ற நினைப்பு. பணம் பறிபோகவில்லை, ஆனால், அனுபவம் பெற்றிருந்தேன்!

எனவே, கல்லூரி தலைமை அதிகாரியிடம் சென்றேன். "கும்பகோணத்திலேயே வேலை கொடுங்கள். சென்னை வேண்டாம்!" என்று கேட்டுக் கொண்டேன். என்ன கேட்டு, என்ன? சென்னையில் தான் வேலை என்று தீர்ப்புக் கூறிவிட்டார்கள்!

வாடகை வீடு பிடிப்பது சுலபமாயில்லை! மற்ற கல்லூரிகளில் 10 மணிக்குப் போனால் போதும். இங்கு கிண்டி பொறியியல் கல்லூரியில் 7 மணிக் கெல்லாம் நிற்க வேண்டும். மற்ற கல்லூரிகளில் நான் படித்த பாடத்தை சொல்லிக் கொடுத்தால் போதும். கிண்டியிலோ நான் படிக்காத பாடத்தை புதிதாகப் படித்து சொல்லித் தர வேண்டும். எல்லாவற்றிற்கும் மேலாக, வருகின்ற சம்பளத்தில் சென்னை செலவுகளுக்கு ஈடுகொடுத்து வித்தை காட்ட வேண்டும்! ஆனால், என்ன ஆயிற்று?

## வெற்றிப் படி

சென்னை வந்ததும் என்னை தொடர்ந்து விஞ்ஞானக் கட்டுரைகள் எழுதச் சொன்னார் ஆசிரியர் துமிலன். பல திறமைகளின் தொடர்பு எனக்குக் கிடைத்தது. நான் பல விஷயங்களைத் தெரிந்து கொண்டேன். மேல்படிப்பு சென்னையிலே படிக்கவும், பின் அமெரிக்கா செல்லவும் சென்னை எனக்கு அடித்தளம் அமைத்துக் கொடுத்தது.

பின்னோக்கிப் பார்க்கையில், சென்னை வந்தது எனக்கு ஏற்பட்ட தோல்வியல்ல! துன்பங் களுக்குப் பின்னால் மறைமுகமாக வெற்றியின் பாதைகள் திறக்கத் தொடங்கின!

"நடக்கும் நிகழ்ச்சிகளைக் கண்டு அந்த கால கட்டத்தில் நாம் அதைத் தோல்வியாகக் கருதி,

புலம்புகிறோம். ஆனால் "நம்மைவிட நமக்கு நல்லதை எப்படிச் செய்ய வேண்டும் என்பது கடவுளுக்குத் தெரிகிறது'' என்று எனது நாட்குறிப்பில் எழுதி வைத்தேன்.

இன்றைய மனவியல் பேரறிஞரான கார்ல் ஜங் இதைத்தான் சொல்கிறார்.

"பல அடையாளங்கள் மூலம் - எதிர்பாராத சம்பவங்கள் மூலம் - ஒரு மாபெரும் சக்தி நமக்குப் பின்னாலிருந்து கொண்டு நம்மை வழி நடத்திச் செல்கிறது'' என்று.

தோல்வி என்பது மேலோட்டம். அதன் அடியிலே வெற்றியின் வித்தது காத்திருக்கிறது!

# 7

## தோல்வி, தோல்வியல்ல தம்பி!

**வா**ழ்வில் தோல்வி என்பது சாதாரணம். மனம் தளர்ச்சி அடைவது இயல்பு. அந்தத் தளர்ச்சி அடைந்த காலங்களில் நாம் ஆர அமர யோசிக்க வேண்டும். அப்போது நமக்குப் . புது வழிகள் தென்படும்.

வழக்கமாக, நாம் என்ன செய்கிறோம்? பலரும் தோல்விகளைக் கண்டு சலித்துவிடுகிறோம். ''இப்படித்தான் முன்பு முயன்றேன். தோல்வி கண்டேன். அங்கே போனேன், அதிலும் தோல்விதான் கிட்டியது. என் அதிர்ஷ்டம் அவ்வளவுதான். நான் ஒரு தோல்வியாளன்'' என்று நம்மைப்பற்றி நாமே தீர்மானம் செய்துவிடுகிறோம்.

நாம் தோல்வியாளன் என்று நம்மீது நாமே முத்திரை குத்திவிடுகிறோம். ஆனால், நாம் தோல்வி யாளர்களா? இல்லை! நாம் எத்தனையோ முறை இதற்கு முன் வெற்றி பெற்றிருக்கிறோம். ஏதோ இந்தமுறை தோல்வியுற்றோம். அவ்வளவுதான்.

அப்படி எடுத்துக்கொள்ளாமல், நம் தோல்வியை எண்ணிப் புலம்பிக் கொண்டிருந்தோ

மானால், எல்லாரிடமும் அதைச் சொல்லி அழுதுகொண்டிருந்தோமானால் - எதையும் சாதிக்க முடியாது! நமது நிலைமை இன்னும் மோசமாகிவிடும்!

### 666 மருந்து

ஒரு மருந்துக்கு 666 என்று பெயரிட்டார்கள். காரணம் 665 முறை முயன்றும் அதை அவர்களால் தயாரிக்க முடியவில்லை. ஆனால் சளைக்கவில்லை. 666-வது முறைதான் அதை தயாரித்தார்கள். எனவேதான், அதற்குப் பெயர் - "சால்வர்சான் 666".

அதேபோல, எடிசன் மின்சார விளக்கை தயார் செய்து கொண்டிருந்தார். அதற்கு மின்சாரம் பாய்ந்தவுடன் ஒளி விடும் ஒரு கம்பி தேவை. அதாவது, மின்சார சக்தியை தடுத்து, ஒளியாக மாற்றும் ஒரு சுருள் கம்பி தேவை. எடிசன் எத்தனையோ உலோகக் கம்பிகளை எடுத்து முயன்றார்; முயன்றார்! மனம் சளைக்காமல் முயன்றார். கடைசியில் 'டங்ஸ்டன்' என்ற உலோகக் கம்பி அந்த உலோகக் கம்பி அந்த வேலையைச் செய்தது!

தோல்வியை சமாளிப்பது எது? சளைக்காத மனம்தான்! தோல்வியை வெற்றிக் கண்டது எது? விடாமுயற்சிதான்!

"தெய்வத்தால் ஆகாது எனினும் முயற்சிதன் மெய்வருத்தக் கூலிதரும்" என்பார் வள்ளுவர். ஆம், தெய்வத்தால் முடியாதது கூட, முயற்சியால் முடியும். தம்பீ சோர்வு இல்லாமல், முயற்சியில் குறைவு இல்லாமல், மீண்டும் மீண்டும் முயற்சிப்பவர்கள் விதியைக்கூட வெற்றி கொள்ள முடியும் என்றும் திருவள்ளுவர் சொல்லியிருக்கிறார்.

## இரவும் பகலும்

நாம் வாழும் உலகை - இந்த பிரபஞ்சத்தைப் பாருங்கள். இதிலிருந்து சில உண்மைகளை நாம் தெரிந்து கொள்ள வேண்டும். அந்த உண்மைகள் நமக்கு மன ஆறுதலையும் நம்பிக்கையையும் தருகின்றன.

என்ன அந்த உண்மைகள்?

உலகில் பகலுக்குப் பின் இரவு வருகிறது. அதே போல இறப்பு பிறப்பு, இன்பம் துன்பம், வெற்றி தோல்வி என்பவை உலகில் மாறி மாறி வருகின்றன. இவற்றை மாற்ற முடியாது. இதுதான் உலக உண்மை.

துன்பம் இல்லாத உலகம் உண்டா?

இருள் இல்லாத வெளிச்சம் உண்டா?

பள்ளம் இல்லாத மேடு உண்டா?

துன்பம், தோல்வி இவையெல்லாம் வாழ்க்கையின் பகுதிகள்; ஒரு காசின் இரண்டு பக்கங்கள்.

"என் குழந்தை செத்து விட்டான். அவனை பிழைக்க வையுங்கள்" என்று அழுத தாயிடம் புத்தர் சொன்னார் - "எந்த வீட்டில் சாக்காடு இல்லையோ அந்த வீட்டிலிருந்து கொஞ்சம் எள் வாங்கி வா."

அந்த பெண்மணி வீடு வீடாக ஏறி இறங்கினாள். ஒவ்வொரு வீட்டிலும் இப்படி ஏதாவது சாவு நிகழ்ச்சிதான் இருக்கிறது என்பதைக் கண்டாள். பிறப்பும், இறப்பும், துன்பமும் தோல்வியும், வெயிலும், மழையும், மின்னலும் இடியும் வாழ்க்கையின் ஓர் அங்கம் என்பதை உணர்ந்து கொண்டாள்.

## சோதனை மேல் சோதனை

தோல்வி வந்தபோது நாம் என்ன செய்யலாம்? அதைக் கண்டு அழுது 'ஐயோ இப்படி நேர்ந்து விட்டதே' என்று புலம்பலாம். அல்லது, "தோல்வி தானே! எனக்குத் தெரியும் அதை எப்படி சமாளிப்பது என்று" எனச் சொல்லிக் கொண்டு, தைரியத்துடன் அதை சமாளிக்கலாம். இப்படிப்பட்ட அணுகுமுறை ஒன்றுதான் நம் கையிலிருக்கிறது.

சில காலகட்டங்கள் நமக்கு சாதகமாக இருப்பதில்லை. என் நண்பர் டாம் குடும்பத்துடன் இரவு விருந்துண்ணப் போனார். கடைகள் எல்லாம் மூடிவிட்டார்கள். சாமான் வாங்க கடைத்தெருப் பக்கம் போனார். சிலை திறப்பு விழாவில் பாதைகளெல்லாம் திசை திருப்பி விடப்பட்டன. ரெயிலேறினார்; இவர் ஏறிய ரெயிலுக்கு முன் சென்ற ரெயில் தண்டவாளத்தை விட்டு இறங்கியதால், ரெயில் பாதி வழியில் நின்று போயிற்று! சில நேரம் தொடர்ந்து இப்படி நடக்கிறது. பட்ட காலிலேயே படும் அல்லவா?

ஏன் இப்படி? உலகமே நமக்கெதிராக- ஆண்டவனே நமக்கெதிராக இருக்கிறார்களா? அதெல்லாமில்லை!

மனவியல் அறிஞர் யங் சொல்கிறார்: "இவையெல்லாம் அடையாளங்கள்! இவை எல்லாம் முன்னோடிகள் - வரும் நிகழ்ச்சிகளின் போக்கை தெரிவிக்கும் சூட்சுமங்கள். 'மேலே செல்லுங்கள்! அல்லது போகாதீர்கள்' என்று எச்சரிக்கும் வழிகாட்டிகள்" என்கிறார்.

"இதை நாம் புரிந்து கொண்டு பயன்படுத்திக் கொள்ள வேண்டும்" என்கிறார்.

அதேபோல சிலநேரம் எடுத்ததெல்லாம் அடுத்தடுத்து வெற்றியடைவதைப் பார்த்திருப்பீர்கள். தொட்டதெல்லாம் பொன்னாவதைப் பார்த்திருப் பீர்கள். ஒருமுறை எனக்கு டெல்லியிலிருந்து கடிதம், பத்திரிகையிலிருந்து பாராட்டு, சர்வதேச விருது என்று அதிசயப்படும்படி ஒன்று மாற்றி ஒன்று நடந்து என்னை திகைப்பில் ஆழ்த்தின.

## ஆடிப்பட்டம் தேடி விதை

நாம் கண்ணால் பார்க்கிற உலகம் ஒன்று. மலை, ஆறு, கடல், வீடு வாசல், மாடு, மனை என்று. மற்றொன்று நாம் புரிந்து கொள்ள முடியாத - புலனுக்கு அப்பாற்பட்ட சக்திகள் இயங்கும் உலகம்.

இந்தப் புலனுக்கு அப்பாற்பட்ட உலகம், சிலநேரம் நமக்கு சில செய்திகளைச் சொல்கிறது; சில காலகட்டம் ஏற்றது; சில காலகட்டம் ஏற்றதில்லை என்று. இன்று மனவியல் அறிஞர் யங் அப்படிச் சொல்வதைத்தான் அன்றே வள்ளுவர் "காலமறிதல்"- காலமறிந்து செயல்படுதல் என்று எழுதி வைத்து விட்டுப் போயிருக்கிறார்.

"ஆடிப்பட்டம் தேடி விதை" என்பது போல நமது நல்வாழ்வின் காற்று எந்தப் பக்கம் அடிக்கிறது என்பதைப் புரிந்து கொள்வது நல்லது. காற்றுள்ள பொழுதே தூற்றிக்கொள்ள வேண்டும். தவற விட்டு விடக்கூடாது. ஏனென்றால், எப்பொழுதாவது ஒரு முறைதான் அதிர்ஷ்டம் வந்து நம் வீட்டுக் கதவைத் தட்டும்!

"தோல்வியின் அடையாளங்கள் தென்படும் போது கொஞ்சம் பின்வாங்கி, நிதானித்து, மறு பரிசீலனை செய்யுங்கள்; அவகாசம் எடுத்துக்

கொள்ளுங்கள்; வேறு பாதையில் முயலுங்கள்'' என்று சொல்கிறார் யங். தோல்வியின் அடையாளம் 'காலம் கனிந்து வரவில்லை' என்பதைக் காட்டுகிறது. காலச் சக்கரம் மறுபடியும் திரும்பும்.

தோல்வி என்பது நாம் செல்லும் பாதை சரியில்லை என்பதை சூசகமாகத் தெரிவிக்கிறது. அதை நாம் புத்திசாலித்தனமாக புரிந்துகொள்ள வேண்டும். உடனே வேறு பாதையை ஆராய வேண்டும்.

தடைகள் ஏற்படும்; ஏற்பட்டால் நின்று நிதானிக்க வேண்டும். தடைக்கல் மீது ஏற முடியுமா? தடைக் கல்லைத் தாண்ட முடியுமா? அல்லது, கல்லைக் குடைந்து உள்ளே புக முடியுமா என யோசிக்க வேண்டும்.

வீடு கட்டிய இடத்திலே ஒரு பெரிய பாறை இருந்தது. வீடு கட்டிக் கொண்டிருந்தவன் முதலில் அதை அப்புறப்படுத்த விரும்பினான்; முயன்றான்; முடியவில்லை. அந்தப் பாறை மீது ஒரு காவல் மாடம் (வாட்ச் டவர்) ஒன்றைக் கட்டினான்! ''யார் வருகிறார்கள் இந்தப்பக்கம்?'' என்று உயரத்திலிருந்து பார்க்க முடிந்தது. இப்போது!

## மீந்த இட்லி

எங்கள் கிராமத்தில் கிருஷ்ண அய்யர் காப்பிக் கடை என்றால் பிரசித்தம். ஊரில் மூன்று நாள் திருவிழா. இட்லிக்கு மாவு நிறைய அரைத்து வைத்திருந்தார். இட்லி நிறைய சுட்டிருந்தார். ஏனெனில் மாவை அப்படியே வைத்திருந்தால் புளித்துப் போய்விடும்.

ஆனால், எதிர்பார்த்த கூட்டம் வரவில்லை. சுட்ட இட்லி பாதிக்கு மேல் அப்படியே இருந்தது.

நேற்று சுட்ட இட்லியை என்ன செய்ய முடியும் என்று கவலைப்படலாம்; அல்லது குப்பையில் கொட்டலாம். தடைக்கல்தான்! ஆனால், அதைத் தடைக்கல்லாக எடுத்துக் கொண்டாரா அவர்? இல்லை. படிக்கல்லாக மாற்றினார்! அதை இன்னும் சிறப்பான பொருளாக செய்து விற்றார்.

என்ன செய்தார் கிருஷ்ணய்யர்? இட்லியை எல்லாம் உதிர்த்தார். வெங்காயம், பச்சை மிளகாய் நறுக்கிப்போட்டு வதக்கினார். கடுகு தாளித்து, இட்லியை உதிர்த்துப்போட்டுப் புரட்டினார். சாப்பிட்டால் தேவாமிருதமாய் இருந்தது. 'இட்லி உசிலி' பறந்து போய்விட்டது. அதிக விலையில்!

சில ஓட்டல்காரர்கள் என்ன செய்வார்கள் தெரியுமா? 'இட்லி உசிலி' மிஞ்சினால், மாலையில் அத்துடன் மாவு சேர்த்துப் பிசைந்து பகோடா ஆக்கி விடுவார்கள்! பகோடா மிஞ்சினால் இரவு பகோடா குழம்பு வைத்துவிடுகிறார்கள்! வெற்றிக்கும் இப்படி எத்தனையோ வழிகள் இருக்கின்றன. 'தோல்வி ஏற்பட்டுவிட்டதே' என்று துவண்டு போய்க் கன்னத்தில் கை வைத்துவிட்டால், ஒரு வழியும் தோன்றாது. அதனால்தான் நம் ஊரில் "கப்பல் கவிழ்ந்தாலும் கன்னத்தில் கை வைக்காதே" என்பார்கள்.

### புல் வெட்டும் எந்திரம்

அமெரிக்க நாட்டில் ஒரு கம்பெனி புல் வெட்டும் எந்திரம் செய்து விற்றது. அங்கே எல்லார் வீட்டிலும், வீட்டிற்கு முன் புல் வளர்த்திருப்பார்கள்.

கோடையிலே மூன்று மாதம் வாரா வாரம் புல் வெட்ட வேண்டும். கோடைக் காலம் முடிந்த தென்றால் பனிக்காலம் தொடங்கிவிடும்; புல் வளராது. புல் வெட்டத் தேவை இல்லை. எனவே, வியாபாரம் பனிக் காலத்தில் படுத்துவிடும்.

இந்த நேரத்தில் ஒரு மனிதர் வந்தார். இந்தப் புல் வெட்டுகிற எந்திரத்தின் அடியில் பனியில் சருக்க சருக்குப் பலகைகளை வைத்துத் தரமுடியுமா என்று கேட்டார். புதிய முயற்சி. அதிக வேலை. எனினும் அவர்கள் சளைக்கவில்லை. செய்து கொடுத்தார்கள்.

எந்திரத்தின் மீது சவாரி செய்து கொண்டு புல் வெட்டுவது போல, இப்போது பனியின் மீது சறுக்கிக் கொண்டு வேகமாக செல்ல முடிந்தது! புதிய பனி வண்டி ("ஸ்நோ மொபைல்") பிறந்தது! விற்பனை இலட்சக்கணக்கில் போயிற்று.

பனிக்காலம் என்று கம்பளியைப் போர்த்திக் கொண்டு உட்கார்ந்திருக்கவில்லை அவர்கள்! பனிக் காலத்திலும் வியாபாரம் நடக்கும் ஒரு புதிய கருவியைத் தயாரித்தார்கள்.

மனம் இருக்கிறதே அது ஒரு அபார சாதனம். அதைத் தட்டிக் கொடுத்து, உற்சாகமாகப் பேசினோ மானால் தோல்வியைக் கூட வெற்றியாக அது மாற்றிவிடும்.

தோல்வி என்பது தோல்வியல்ல! நாமே மேலே ஏறும் வெற்றிப் படி.

# 8

## வெற்றியாக மாற்றலாம், தம்பி!

**"தோ**ல்வியே வெற்றிக்கு முதல்படி" என்று சொல்லும்போது, "தோல்வியைத் தழுவுங்கள்! தோல்வியை வரவேற்று மகிழுங்கள்" என்று சொல்கிறோமா? அல்லது, "வெற்றி பெறுவதற்கு தோல்வி அடைந்துதான் ஆக வேண்டும். எனவே தோல்வியை எதிர்பாருங்கள்" என்று சொல்கிறோமா?

இல்லை! இல்லவே இல்லை!

தயவுசெய்து, அப்படி எண்ணி விடாதீர்கள்!

"வெற்றி வரும்" என்று நம்புங்கள்; திட்ட மிடுங்கள்; உழையுங்கள். ஆனால் அதையும் மீறி தோல்வி ஏற்படுகிறதென்றால், இடிந்து போகாதீர்கள். தோல்வி ஏன் ஏற்பட்டது? என்று காரணத்தை ஆராயுங்கள். அடுத்தமுறை அப்படி தோல்வி ஏற்படாதவாறு உங்கள் திட்டத்தை அமையுங்கள்.

கையிலுள்ள பொருளை இழந்து தொழிலில் நஷ்டம் அடையும்போது மனிதன் தவிக்கிறான். "இதிலிருந்து மீள்வேனா?" என்று பயப்படுகிறான். 'நம்மிடம் இருப்பது நமது மனம்தான்' என்று தைரியம்

சொல்லிக்கொண்டு, மனத்தை உறுதிப்படுத்திக் கொண்டு, தன் முழுக் கவனத்தையும் செய்கின்ற தொழிலின் மீது திருப்புகிறான்.

பசியைப் பற்றி கவலைப்படுவதில்லை; தூக்கத்தைப் பற்றி அக்கறைப்படுவதில்லை; எடுத்த தொழில் ஒன்றே குறியாக உழைக்கிறான்; வெற்றி பெறுகிறான்.

தோல்வி என்ன செய்தது? நம்மிடமுள்ள ரோசத்தைக் கிளப்பிவிட்டது. நம்மிடமுள்ள தன் மானத்தின் தலையில் அடித்து நம்மை எழுந்து நிற்கச் செய்தது. நம்மை கேவலப்படுத்தி அதன்மூலம் நம் கோபத்தைக் கிளப்பி நம் மனஉறுதியை வளர்த்தது.

**பயம் நீங்குகிறது !**

தோல்வி என்ற அனுபவம், தோல்வியைப் பற்றிய பயத்தைப் போக்குகிறது. நமது மன உறுதியை வளர்க்கிறது. நமக்கு அறைகூவலாக நிற்கிறது.

ஒருமுறை ஓட்டாண்டி ஆனவன் - தோல்வி கண்டவன் - மறுமுறை தோல்வியைக் கண்டு, அவ்வளவு பயப்படமாட்டான். தோல்வியிலிருந்து எப்படி மீண்டு வருவது என்பதில்தான் குறியா யிருப்பான். தோல்வியைப் பற்றிய நமது அனுபவம் “தோல்வி தானே! என்ன செய்யும் என்னை அது?” என்று கேட்கச் சொல்கிறது.

பெண்கள் எல்லாம் அரசியலில் இறங்காத காலம், அது. அறுபதாண்டுக்குமுன். அப்போது கே.பி. சுந்தராம்பாள் பிரபல பாடகி - பிரபல நாடக நடிகை. காங்கிரசுக் கொடியைக் கையில் பிடித்துக்கொண்டு தெருவில் தேசப் பாடல்களைப் பாடி பொதுமக்களை

வெள்ளைக்கார அரசுக்கு எதிராக எழுப்பிக் கொண்டிருந்தார்.

வெள்ளை அரசு அவரைப் பிடித்து சிறையில் தள்ளியது.

சிறை செல்வது சுலபமான வேலையல்ல. அதுவும் பெண்கள் சிறை செல்வது! ஊர் உலகம் சிறை சென்றவர்களை ஒருவிதமாகப் பார்க்கும் காலம், அது.

சிறையிலிருந்து வெளிவந்த கே.பி.எஸ். பாடினார், முன்னிலும் ஆவேசமாக.

"சிறைச்சாலை என்ன செய்யும்?" என்று பாடினார். மக்களிடையே வீரம் எழுந்தது. கூட்டம் அதிகமாயிற்று. அந்தப்பாட்டு பிரபலமடைந்தது. கே.பி.எஸ். மேலும் பாடினார். "சிறைச்சாலை என்ன செய்யும்?" என்று பாடியவர் மேலும் ஒரு படி மேலே போய் "சிறைச்சாலை என்ன செய்தது?" என்று பாடி- ஒரு கேள்விக்குறியுடன் பாட்டை நிறுத்தினார்!

கூட்டம் ஆரவாரித்தது - எழுந்து நின்றது - காற்றில் வீரம் கொப்பளித்தது. அதுபோல -

தோல்வி கண்டவன் என்ன சொல்கிறான்? "தோல்வி என்னை என்ன செய்ய முடியும்?" என்று கேட்கிறான். தோல்வியை ஓரிருமுறை சமாளித்தவன் ஒருபடி மேலே போய், "ஓ ... தோல்வியே! உன்னால் என்னை என்ன செய்ய முடிந்தது?" என்று கேட்கிறான்!

**என்ன காரணம்?**

தொழிலில் இறங்குபவர்கள் 10-ல் 8 பேர் தோற்றுப் போகிறார்கள். இதற்குக் காரணம் பல. அனுபவமின்மைதான் முக்கிய காரணம். ஆனால், அதற்காக "இனி தொழிலே செய்ய மாட்டேன்!" என்று

விட்டுவிடுகிறார்களா? சிறிதுகாலம் கழித்து மறுபடியும் முயல்கிறார்கள்.

தொழிலில் இறங்குபவர்களில் யார் வெற்றி பெறுகிறார்கள் என்று ஆராய்ந்ததில் வெற்றி பெற்றவர்கள் எல்லாம் முதல் இரண்டுமுறை தோற்றுப் போயிருக்கிறார்கள் என தெரிய வந்தது.

எனவே தோல்வி வந்ததென்றால் கலங்காதீர்கள். நீங்கள் சரியான பாதையில்தான் செல்கிறீர்கள்; ஆனால் தோல்விகளைத் தாண்டித்தான் போக வேண்டும், வெற்றி பெற.

ஓ.டி. ஓமனா ஓட்டப் பந்தயத்தில் தங்கப் பதக்கம் பெறுகிறார், ஒலிம்பிக்கில். ஆனால், அடுத் தடுத்து தோல்வியுறுகிறார். ஈயப்பதக்கம் கூட வாங்க முடியவில்லை, அவளால். என்ன ஆகிறது?

"ஓமனாவை யாரும் தோற்கடிக்க முடியாது!! தங்கப் பதக்கங்கள் வாங்கிக் குவிப்பவள் அவள்!" என்று மக்களிடையே பெரும் எதிர்பார்ப்பை முதல் வெற்றி ஏற்படுத்தி விடுகிறது.

இப்பொழுது நீங்கள்தான் அந்த தோற்ற விளையாட்டு வீராங்கனை என்று வைத்து எண்ணிப் பாருங்கள்.

உங்கள் மனம் தோல்வியினால் என்ன பாடுபடும் யோசியுங்கள்.

முதல் வெற்றி சிலநேரம் நமக்கு ஒரு அசாதாரண நம்பிக்கையை ஏற்படுத்தி விடுகிறது. "எடுத்ததெல்லாம் வெற்றியடையும்" என்ற ஒரு போலி நம்பிக்கையை ஏற்படுத்தி விடுகிறது. நமது ஆணவத்தை வளர்த்து விடுகிறது.

தோல்வி ஏற்பட்டிருந்தால் ஒரு நிதானம் இருந்திருக்கும்; ஒரு பயம் - ஒரு கவனம் - இருந்திருக்கும். ஒரு அடக்கம் ஏற்பட்டிருக்கும்.

அடக்கம், கவனம், நிதானம் - இவற்றை எல்லாம் தோல்விதான் தருகிறது. எனவேதான், தோல்வி ஒரு பாடம் என்று சொல்கிறார்கள். தோல்வி நமக்கு பாடம் புகட்டுகிறது. மாறாக, வெற்றியில் நாம் எதையும் கற்றுக் கொள்வதில்லை - சரியான பாதையில் சென்றிருக்கிறோம் என்பதைத் தவிர அந்த உண்மைகூட வெற்றி பற்றி சிந்திக்கும்போதுதான் புலப்படுகிறது. "வெற்றி சரியாகக் கண்காணிக்கப்படா விட்டால், அங்கே வீழ்ச்சியின் விதை விதைக்கப் படுகிறது" என்றார், தத்துவஞானி ஜேம்ஸ் ஆலன்.

**தோல்வியுடன் பேசுங்கள்!**

நீங்கள் ஒரு எழுத்தாளர். உங்கள் கதையோ திரும்பத் திரும்ப திருப்பி அனுப்பப்படுகிறது.

நீங்கள் வேலைக்கு விண்ணப்பிக்கிறீர்கள். எல்லா இடங்களிலிருந்தும் "வேலை இல்லை" என்ற பதிலே கிடைக்கிறது.

தொழில் தொடங்குகிறீர்கள். பல எந்திரக் கோளாறுகள்! உற்பத்தி செய்ய முடியவில்லை.

அந்த நிலையில் நாம் என்ன செய்யலாம்?

ஒருமுறை ஒரு நண்பரின் தோட்டத்தைப் பார்க்கப் போனார் தத்துவ ஞானி ஜே. கிருஷ்ண மூர்த்தி. தோட்டக்கார நண்பர் சொன்னார்.

"எல்லா மரங்களும் இங்கே காய்க்கின்றன. ஏனோ இந்த ஒரு மரம் மட்டும் காய்ப்பதில்லை. நான் இதை வெட்டிவிடப் போகிறேன்!"

மறுநாள் காலை எழுந்த ஜே.கே. அந்த மரத்தின் அருகில் போய் நின்றார். தடவிக் கொடுத்தார்.

அந்த மரம் வெட்டப்படுவதை அவர் விரும்பவில்லை. அந்த மரத்துடன் பேசினார்.

"நீ அழகான மரம். நல்ல வயது. காய்க்க வேண்டாமா? பூக்க வேண்டாமா? நீ பூத்து மலரைக் கொடு; காய்த்துக் கனியாகு" என்று பேசி அன்புடன் தடவிக் கொடுத்தார்.

அந்த ஆண்டு முதன்முறையாக அந்த மரம் அமோகமாகக் காய்த்தது.

தோல்வி வரும். உண்மைதான். ஆனால், அதை அன்புடன் அணுகுங்கள்; பேசுங்கள். வெற்றி வார்த்தைகளை பயன்படுத்துங்கள். உறவாடுங்கள். உடலிலே நோய் ஏற்பட்டாலும் சரி; சூழ்நிலை மோசமாக இருந்தாலும் சரி.

இந்த உலகில் எதுவுமே நிரந்தரமல்ல.

தோல்வியும் நிரந்தரமல்ல.

நமது மனோபாவத்தை நாம் மாற்றிக் கொள்ளும் போது இப்பிரபஞ்ச இயக்கத்தின் வெற்றி லயத்தில் வெற்றிப் பாதையில் ஐக்கியமாகிறோம்.

அது நம்மை வெற்றியை நோக்கி அழைத்துச் செல்கிறது.

**வெற்றிக் கனவு**

தோல்வியை வெற்றியாக மாற்றுவது எப்படி? வெற்றி மனோபாவம்தான்.

"கைத்தலம் பற்றக் கனாக் கண்டேன் தோழி" என்று மணமாகாத ஒரு பெண், தான் திருமணம்

செய்துகொள்வதைப் பற்றிப் பாடுகிறாள். கனாக் காண்கிறாள். தன் மனக்கண்முன் அந்த நிகழ்ச்சியைப் பார்த்து அனுபவிக்கிறாள்.

அவள் திருமணம் செய்து கொள்கிறாள்.

யாரை?

உலகின் மிகச் சிறந்த மனிதரை.

அந்தப் பெண்தான் ஆண்டாள். அவர் பாடியது திருப்பாவை. ஆண்டவனுக்காக தன்னை அர்ப்பணித்துக் கொண்டாள் ஆண்டாள்.

ஆண்டாள் பாடலைப் படித்தோமானால் ஆண்டாள் கண்ட கனவெல்லாம் - கற்பனை எல்லாம் முன்னேற்றமாக - வெற்றிக் கனவுகளாக - நினைத்ததை அடையும் கனவுகளாக இருப்பதைக் காண்பீர்கள்!

"உள்ளுவதெல்லாம் உயர்உள்ளல் மற்றது தள்ளினும் தள்ளாமையுடைத்து" என்பார் வள்ளுவர். ஆம், தோல்வியே ஏற்பட்டாலும் வெற்றியை நினையுங்கள்! நிச்சயம் வெற்றி காண்பீர்கள்!!

9

## செட்டியார் முறுக்கு வேண்டும், தம்பி!

ஒரு தம்பி வெற்றிப் படிகளைத் தாண்டிய கதை - என் பெயர் சந்திர மோகன்.

என் பெயர் அதுவல்ல, முதலில் இருளாண்டி என்று என் அப்பா பெயர் வைத்தார். ஊர் தெரிந்ததும் பல மனிதர்கள், குறிப்பாக எழுத்தாளர்கள் - சினிமா நட்சத்திரங்கள் - புதுப் பெயரை வைத்துக் கொள்வதைக் கண்டேன். ஏதோ பெரிய ஒன்றைக் கண்டுபிடித்தாற்போல என் மனதிலே ஒரு ஒளி!

இருளாண்டி! ஆண்டி! ஆண்டிப்பயல்! இருள் வேறு! என்றைக்கு நான் வெளிச்சத்துக்கு வருவது?

'கெட்டும் பட்டணம் சேர்' என்ற மொழிப்படி நான் சென்னைக்கு வந்தபோது "உன் பெயரென்ன?" என்று கேட்டார்கள்.

"சந்திரமோகன்" என்றேன்.

"பலே! நல்ல பெயர்!" என்றார்கள்.

சந்திரனே குளிர்ச்சி. அதிலே மோகனம் ஒரு கவர்ச்சி. குளிர்ச்சியும் கவர்ச்சியுமாக வாழ்வைத் தொடங்கினேன்.

இன்சூரன்சு ஏஜண்டு வேலை கிடைத்தது. பிறருடைய அன்பைப் பெற - நட்பைப் பெற - கவனத்தைக் கவர என்ன செய்ய வேண்டுமென்று யோசித்தேன்.

பிறருக்கு நாம் ஏதாவது செய்தால் - உதவினால் ... என்ற எண்ணம் ஏற்பட்டது.

காரணம் - ஒருநாள் சாலையிலே ஒரு வயதான பெரியவர் தலையிலே ஒரு மூட்டையை சுமந்து கொண்டு வந்தார். நிறையப் பைகள்.

நானும் அந்தப் பக்கமாக வந்து கொண்டிருந்தேன். பார்த்தேன். பெரியவர் சிரமப்பட்டுக் கொண்டிருந்தார். கைச்சுமையை நான் வாங்கிக்கொண்டேன். என் வேலையை ஒத்திப் போட்டுவிட்டு அவர் வீடு வரை நடந்தேன்.

வீட்டில் பையை இறக்கி வைத்துவிட்டு திரும்பியபோது அந்தப் பெரியவர், "சுந்தரராமா!" என்றொரு குரல் கொடுத்தார். வீட்டினுள்ளிருந்து ஒரு கம்பீரமான மனிதர் வெளியே வந்தார். பெரியவருடைய மகனாம். பெரிய கம்பெனியில் வேலையாம். என்னைப் பற்றிச் சொன்னார், பெரியவர். சுந்தரராமன் மனம் நெகிழ்ந்து போனார்.

இப்படித்தான் சதர்ன் ஏஜன்சீஸ் ஜெனரல் மானேஜர் சுந்தரராமனின் தொடர்பு எனக்குக் கிடைத்தது.

அவர் என்னை அலுவலகத்திற்கு வரச் சொன்னார். எனது முதல் இன்சூரன்சு விற்பனை அங்கேதான் தொடங்கியது. நான் எண்ணிக் கூடப் பார்க்கவில்லை. நான் செய்த சிறு உதவிக்கும், என் ஆயுள் காப்பீட்டுக் கழக விற்பனைக்கும் நெடுங்காலத் தொடர்பு இருக்குமென்று!

பலரும் கேட்கிறார்கள் - "எப்படி ஐயா! நீங்கள் தஞ்சையின் தலைசிறந்த ஆயுள் காப்பீட்டுக் கழகத்தின் விற்பனையாளராக இருக்கிறீர்கள்?" என்று.

எனது பதில் ஒரு புன்முறுவல்தான்! காரணம் இதிலே எந்த ஒரு கம்பசித்திரமுமில்லை.

என் தந்தை காலமானபோது, "மகனே! உன்னால் முடிந்த அளவு பிறருக்கு உதவு. தம்பியைப் பார்த்துக் கொள். தங்கையைப் பார்த்துக்கொள். அம்மாவைப் பார்த்துக்கொள். யாருக்கு உதவினாலும் அது பத்து மடங்காகத் திரும்பிவரும் என்பதை நம்பு" என்று சொல்லிவிட்டுப் போனார்.

அது ஒரு சோடா பாட்டில் கம்பெனி. மேலாளரைப் பார்க்க விரும்பினேன். முன்அறையில் கூட்டம். 'என்னைப் பார்ப்பார்களா?' என்ற சந்தேகம். 'வாய்ப்பு இல்லை இங்கு' என்று நானே எனக்குள் சொல்லிக்கொண்டு கீழே இறங்கினேன். லாரியில் பல "சோப்புத்தூள்" டிரம்கள் வந்து இறங்கியவண்ணம் இருந்தன. அவை எல்லாம் பாட்டில் கழுவ என்றார்கள்.

நான் பக்கத்துத் தெருவில் இருந்த ஒரு மருந்துக்கடை மேலாளரைப் பார்க்க சென்றேன். அவரும் வேலையாக இருந்தார். இருமல் மருந்து தயார் செய்யும் நிறுவனம் அது.

இருமல் மருந்து தயார் செய்ய சுத்தமான தண்ணீர் வேண்டும். "இந்தப் பக்கத்தில் உள்ள தண்ணீர் சுண்ணாம்புத் தண்ணீர். அதற்காக தண்ணீரைச் சுத்தப்படுத்த இப்போதுதான் ஒரு எந்திரம் வாங்கினேன். இது இல்லாவிட்டால் என் பொருளின் தரம் குறைந்து போய்விடும்" என்றார், அந்த மேலாளர்.

எனக்கு ஏதோ ஒன்று பொறியில் தட்டினாற் போல இருந்தது! "இதே சிக்கல்தான் பக்கத்து சோடா பாட்டில்காரருக்கும் இருக்க வேண்டும். அவரும் தண்ணீரை சுத்தப்படுத்த ஏராளமாக செலவழிக்க வேண்டும். ஏன் அவரிடம் இதைப்பற்றி சொல்லக் கூடாது?"

மறுநாள் சோடா பாட்டில் கம்பெனிக்குப் போனேன். "ஜி.எம்.மைப் பார்த்து ஒரு முக்கியமான விஷயம் தெரிவிக்க வேண்டும். ஒரே ஒரு நிமிடம்!" என்றேன், செயலரிடம். அனுமதி கிடைத்தது. உள்ளே போனேன்.

"ஐயா! இந்தப் பக்கத்துத் தண்ணீர் சுண்ணாம்புத் தண்ணீர் என்று கேள்விப்பட்டேன். நீங்கள் தண்ணீரை சுத்தப்படுத்துகிற ஒரு எந்திரம் வாங்கிப் போட்டால், இப்படி ஆயிரக்கணக்கில் இரசாயனப் பொருளை வாங்கிக் கழுவவேண்டாம். குறைந்த அளவில் இரசாயனப் பொருளை பயன்படுத்தினால் போதும்" என்றேன்.

என்னை ஒரு கணம் நிமிர்ந்து பார்த்தார். 'பையன் புத்திசாலி' என்று என்னைப் பார்த்து வெளிப்படையாக சொல்லிவிடவில்லை. அந்த எண்ண ஓட்டம் அவரது கண்களிலே தெரிந்தது. என்ன நடந்தது, அதன்பின்?

ஓராண்டுக்குள் என்னை மீண்டும் கூப்பிட்டார். தன் தேவையைக் குறிப்பிட்டார். ஒரு பெரிய இன்சூரன்சு பாலிசியை அவருக்கும் அவர் நிறுவனத்துக்குமாகப் பெற்றேன்.

ஒருமுறை ஒரு பெரிய துணிக்கடை நிர்வாகியைப் பார்க்கப் போனேன். அவர் தரமான ஆடைகளை தயாரித்து விற்றுக் கொண்டிருந்தார்.

"எங்கே இந்த சட்டையையும் சூட்டையும் வாங்கினீர்கள்?" என்றார், ஆச்சரியத்துடன். ஆர்வம் அவர் கண்களில் மின்னியது.

நான் எப்போதுமே நன்றாக, அழகாக உடுத்திச் செல்பவன். உடை சுத்தமாக இருக்கும். கூடியவரை மடிப்புக் கலையாமல் இருக்கும். உயர்தரமான, எடுப்பான ஆடைகளைத்தான் வாங்குவேன்; அணிவேன்.

நான் அவ்வளவு பெரிய பணக்காரன் அல்லதான். ஆனால், வெளியே என்னை எதை வைத்து மதிக்கிறார்கள்? என் உடையையும் நான் பேசும் முறையையும் வைத்துதான். என் உடை அவரை கவர்ந்திருக்க வேண்டும்.

நாங்கள் இன்சூரன்சு பற்றிப் பேசவில்லை. உடையைப் பற்றி, துணியின் தரத்தைப் பற்றி, புதிய நாகரிகம் பற்றி, மற்ற நிறுவனங்கள் பற்றிப் பேசினோம் — நிறைய.

காப்பி வந்தது; குடித்தேன். பத்து நிமிட நேரம்தான் உங்களுக்குத் தரமுடியும் என்றவர் ஒரு மணிக்கும் மேலாக என்னிடம் பேசிக் கொண்டிருந்தார்.

துணி, உடை, அதன் தரம், இன்றைய விற்பனைக்குரிய தன்மைகள் பற்றி எனக்குத் தெரிந்ததை எல்லாம் இனிமையாகப் பேசிக்கொண்டே என் அறிவை வாரி வழங்கினேன். வெளியே கிளம்பிய போது "உங்கள் இன்சூரன்சு பாலிசி பற்றி சொல்லவே இல்லையே!" என்றார். விவரம் அதிகம் கேட்காமல் என்னை நம்பி தன் நிறுவனத்தை என்னிடம் 'இன்சூர்' செய்தார்.

சிறு உதவி; என் யோசனைகள்.

என் உடை; அது ஏற்படுத்திய கவர்ச்சி.

ஒருமுறை பள்ளிக்கூட ஆண்டு விழாவிற்குப் போயிருந்தேன். பாடங்களில் முதல் மதிப்பெண் வாங்கும் மாணவர்களுக்கும், விளையாட்டுப் போட்டிகளில் வெற்றி பெற்ற மாணவர்களுக்கும் பல பரிசுகளை பள்ளி நிர்வாகிகள் வழங்கிக் கொண்டிருந் தார்கள்.

நான் யோசித்தேன். நன்றாக, கலகலப்பாக, எல்லாருடனும் பழகுகிற மாணவ மாணவிகளுக்கும், நன்றாக அழகாக உடை உடுத்திக் கொண்டு தலைசீவிக் கொண்டு வருகிற மாணவ மாணவிகளுக்கும் பரிசு கொடுத்தால் என்ன என்று யோசித்தேன். நல்ல யோசனை என்றார் தலைமை ஆசிரியர்.

சில நூறு ரூபாய்தான் செலவு! இதன்மூலம் அங்கு வந்திருந்த பெற்றோர்களின் மனதில் நான் இடம்பிடித்துவிட்டேன்!

ஒரு சிறிய பணி; நல்ல செயல். இவ்வளவு பேருடைய நல்ல எண்ணத்தை இதனால் பெற்றுவிட முடியுமென்று நான் முதலில் நினைக்கவில்லை!

ஒரு நட்சத்திரத்தை தற்செயலாக சந்தித்தேன். அவர் நல்ல நடிகை. கண்கள் — அவர் கண்கள் — பேசும் விழிகள். கண்களிலே ஒரு துடிப்பு. ஒரு கவர்ச்சி ஒரு ஈர்க்கும் இன்பம் இருக்கும். நான் சொக்கிப் போயிருக்கிறேன். பார்த்து ஒரு கணம் சுவைத்தேன், அந்த கண்களை.

"உங்களுககு அழகான கண்கள்!" என்றேன். சிரித்துக் கொண்டார்!

"ஏன் உங்கள் கண்களை இன்சூர் செய்யக் கூடாது?" என்றேன்.

அவர் கண்கள் அகல விரிந்தன. "கண்களை இன்சூர் செய்யமுடியுமா?"

"நமது ஊரில் அது இன்னும் பிரபலமாக வில்லை. வெளிநாடுகளில் அழகிய கால்களை, உதடுகளை எல்லாம் இன்சூர் செய்வார்கள். நான் இது முடியுமா என்று பார்க்கிறேன். இதற்காகும் செலவைவிட உங்களுக்கு இதனால் கிடைக்கும் விளம்பரமும் உங்கள் கண்களுக்கு தனி கவர்ச்சி உண்டு என்பதை ஒரு இன்சூரன்சு கம்பெனி ஏற்றுக் கொண்டிருக்கிறது என்ற விஷயமும் உங்கள் முன்னேற்றத்திற்கு நல்லது" என்றேன். நான் அவர் ரசிகனாய் இருந்ததற்கு மாறாக இப்போது அவர் என் ரசிகையாகிவிட்டார்! வெளிநாட்டு நிறுவனம் ஒன்றில் அவர் கண்களை 'இன்சூர்' செய்தேன்!

இஞ்சிக்கும் இடுப்பழகிகளுக்கும் என்ன தொடர்பு உண்டோ, எனக்குத் தெரியாது. ஆனால், கண்களுக்கும் கவர்ச்சிக்கும், நாம் செய்கின்ற சிறு உதவிக்கும், அதன் விளைவாக ஏற்படுகின்ற நன்றிக்கும் பலனுக்கும் நிறையத் தொடர்பு உண்டு என்பதைத் தெரிந்துகொண்டேன்.

# 10

## தம்பி! காலம் கனியும்! கண்டுகொள்!!

"தோல்வியில் கலங்கேல்" என்றார், பாரதி. தோல்வியைக் கண்டு கலக்கம் அடைவதோ, பயப்படுவதோ நல்லது அல்ல.

நாம் ஒரு குறிக்கோள் வைத்திருக்கிறோம். அதை நோக்கி முயற்சிக்கிறோம். வேலைகள் செய்கிறோம். எனினும் தோல்வி ஏற்படுகிறது. குறிக்கோள் கைகூடவில்லை. அப்படிப்பட்ட நிலை ஏற்படும்போது பல சாதாரண மனிதர்கள் — "சரி! அடைய முடியாது. இதை விட்டுவிட வேண்டியது தான்" என்று விட்டுவிடுகிறார்கள். இலட்சியத்தில் முன்பிருந்த பிடிப்பு இல்லை. மன உறுதி இல்லை.

தண்ணீர் கலங்கும்போது சந்திர பிம்பம் சரிவரத் தெரியாது. கொஞ்ச நேரம் பொறுத்திருங்கள். கலக்கத்தை ஏற்படுத்திய அலைகள் அமைதி அடைகின்றன. அந்தப் பால் நிலவை தண்ணீரிலே தெளிவாகப் பார்க்க முடிகிறது.

வாழ்வில் கலக்கம், குழப்பம் ஏற்படும். ஆனால், கொஞ்சம் பொறுத்திருந்தோமானால்

கலக்கம் நீங்கும். நமது இலட்சியம் மீண்டும் தெரியும்; நம்மை கைநீட்டி அழைக்கும்.

**பருவகாலங்களைப் பாருங்கள்!**

கோடை என்ற வெப்பகாலம் — சுட்டுப் பொசுக்கும் வெயில் காலம் இருக்கிறது. அது லேசாய் மறைய இலையுதிர் காலம் தொடங்குகிறது. பிறகு கொஞ்சம் கொஞ்சமாக மழைக்காலம் — பனிக்காலம். அது மறைய மறைய வசந்த காலம் வருகிறது. எங்கு பார்த்தாலும் புதுமை. காற்றிலே ஒரு புத்துணர்ச்சி. எங்கு பார்த்தாலும் பச்சைப் பசேல். செடிகளும் கொடிகளும் பூத்து காய்த்துக் குலுங்கும் காலம்; பிறகு மீண்டும் கோடை வெயில் தலைகாட்டுகிறது. இப்படியாகப் பருவ காலங்கள் தொடர்கின்றன.

கோடை வெயிலில் "இது எப்போது முடியும்? இது முடியவே முடியாதா?" என்று நாம் யோசிக்கும்படி அதன் கடுமை இருக்கிறது. ஆனாலும், இந்தக் கடுமையான வெயிலும் கொஞ்ச காலம்தான்.

அதேபோலத்தான் கஷ்ட காலங்களும்; சோதனை நேரங்களும். அவற்றிற்கும் ஒரு முடிவு உண்டு. நாம் கொஞ்சம் காத்திருக்க — பொறுமையுடன் எதிர்பார்த்திருக்கக் கற்றுக்கொள்ள வேண்டும்.

'பருவ காலம்' என்பது "காலம் கனிந்து வருகிறது" என்பதைத் தெரிவிக்கிறது. அந்தப் பருவ காலத்தில்தான் போதுமான மழை பெய்கிறது. காற்றில் போதுமான ஈரம் இருக்கிறது. செடி கொடிகள் வளர போதுமான வெளிச்சம் இருக்கிறது.

பருவ காலத்திற்கு முன்போ பின்போ பூக்கள் மலர்வதில்லை. காய்கள் காய்ப்பதில்லை.

### கடல் அலை

காலம் கனிந்து வருகிறதா என்பதைக் கவனியாத மனிதர்கள் என்ன செய்கிறார்கள்?

வேலை உடனே முடியவேண்டுமென அவசரப்படுத்துகிறார்கள். பழம் பழுக்க ஒரு மாத காலமாகும். ஆனால், அவசரக்காரன் என்ன செய்கிறான்? காயைப் பறிக்கிறான். புகைமூட்டம் போடுகிறான். அரிசிப் பானைக்குள் வைக்கிறான். விளைவு? பெரும்பாலான பழங்கள் அழுகி விடுகின்றன. பல பிஞ்சிலே பழுத்ததன் விளைவாக, சூம்பிப் போய், சுவை இழந்துவிடுகின்றன.

"பருவத்தால் அன்றி பழா" என்பது பழமொழி. "பருவ காலத்தில் அன்றி பழங்கள் பழுப்பதில்லை" என்கிற அனுபவ மொழியை நாம் நன்கு உணர்ந்து கொள்ளவேண்டும். இல்லாவிடில் இயற்கைக்கு எதிராக நாம் போரிட்டுக் கொண்டிருப்போம்.

கடலிலே நீந்தும் நாம் நம் தலையைத் தூக்கி மிதப்பது போல அல்லது உடனே தலையைக் குனிந்து நீரில் முழுகி அலையின் வேகத்தை சமாளிப்பது போல, இயற்கையை சமாளிக்க வேண்டும்.

உலக உண்மைகள் என்று சில விதிமுறைகள் இவ்வுலகையும் பிரபஞ்சத்தையும் இயக்குகின்றன. அதை உணர்ந்து அதன் போக்கில் நாம் வாழும்போது நன்மைகளைப் பெறுகிறோம்.

### மீன் பிடிப்போர்

அமெரிக்க நாட்டில் பனி உருகி ஆற்றில் வெள்ளம் வரும்போது, அது நீர்த்தேக்கத்தைத் தாண்டும்போது அங்கே நெத்திலி என்று

சொல்லப்படும் சிறு மீன்கள் ஏராளமாக வந்து விழும்; பிடித்து மாளாது — அவ்வளவு அதிகம்.

அந்த குறிப்பிட்ட பருவத்தைத் தாண்டினால் மீன் வருவது கொஞ்சம்தான்.

மீன் பிடிப்பவர்கள் அந்தப் பருவ காலத்திற்காகக் காத்திக்கிறார்கள். குறிக்கோளை அடைய நாமும் காத்திருக்க வேண்டும்.

**மணப்பெண்**

எங்கள் வீட்டிற்கு அருகில் ஒரு குடும்பம் இருந்தது. அந்த வீட்டில் ஒரு இளைஞன் இருந்தான். பள்ளியில் படித்துக்கொண்டிருந்தான். எல்லாரும் அவனைக் கேட்பார்கள்.

"நீ என்ன உன் மாமன் மகளைத்தானே மணம் செய்துகொள்ளப் போகிறாய்?"

"நானா? அவளையா? அவள் அழகில்லை! அய்யே!" என்று பழிப்புக் காட்டுவான்.

அவன் கல்லூரிப் படிப்பு முடித்ததும் திருமண அழைப்பிதழை எடுத்துக் கொண்டு என் வீட்டுக்கு வந்தான்.

"பலே! திருமணமா? வாழ்த்துக்கள்! யார் மணப்பெண்? உன்னுடன் படித்தவளா?" என்றேன், நான்.

"இல்லை. என் மாமன் மகள்தான். மிக அழகாக இருக்கிறாள். அவளுக்கும் என்னைப் பிடித்திருக்கிறது" என்று சொல்லி வழிந்தான்!

பருவ காலம் செய்யும் மாய வேலைகளைப் பற்றி என் மனம் சிரித்துக் கொண்டே அசை போட்டது.

**கோர்பசேவ்**

1980-ல் ரஷியாவில் தனி மனித சுதந்திர மில்லை. கம்யூனிச ஆட்சி. ஜனநாயகமில்லை. கட்சிக் காரர்களால் தேர்ந்தெடுக்கப்படுபவர்கள் நாட்டை ஆள்வார்கள். எதிர்த்துப் பேசுபவர்களை பனி நாடான சைபீரியாவுக்கு அனுப்பிவிடுவார்கள். "டாக்டர் ஷிவாகோ" என்ற நாவலை எழுதிய போரிஸ் பாஸ்டர் நாக் என்ற எழுத்தாளருக்கு சிறை. சோல்ச நீட்சன் என்ற நாவலாசிரியர் நாடு கடத்தப்பட்டார்.

மாமிசத்திற்கும் ரொட்டிக்கும் கியூ. பொருள் தட்டுப்பாடு. விளைச்சல் இல்லை. தொழில்நுட்பத்தில் முன்னேற்றமில்லை. அரசாங்க அதிகாரிகள் கம்பெனிகளை நிர்வகித்ததால் தொழில் உற்பத்தி பெருகவில்லை. தேக்கம்.

இந்த காலகட்டத்தில் வந்தார், கோர்பசேவ். "தனி மனித ஆர்வமும், மனந்திறந்த கருத்துக்களும் வரவேற்கப்பட வேண்டும்" என்றார். மனந்திறந்த கருத்துக்கள் என்பதன் மூலம் சுதந்திரத்திற்கு வழி கோலினார்.

"பொருட்கள் இனி அரசாங்க மேற்பார்வை யில் உற்பத்தி செய்யப்படமாட்டாது. வினியோகிக்கப் படமாட்டாது. மக்களின் தேவைக்கேற்ற சந்தை வியாபாரம் போல, பொருள் உற்பத்தியும் விற்பனையும் இருந்தால்தான் நாடு முன்னேறும்; பொதுமக்களது பொருளாதாரம் உயரும்" என்றார். இதன் விளைவாக "அரசாங்கக் கட்டுப்பாட்டில் எல்லாவற்றையும் சீர் செய்துவிடலாம்" என்ற கொள்கை சுக்குநூறாயிற்று.

பிரச்சினைகள் விசுவரூபம் எடுத்த நேரத்தில் அதன் அடிப்படைகளை மாற்ற வேண்டும் என்று

கோர்பசேவ் கொஞ்சங் கொஞ்சமாக ஒரு நான்கு ஆண்டுகள் பேசிவந்ததன் விளைவாகத் தயாராயிருந்த மக்களிடையே ஒரு புதிய விழிப்புணர்வு ஏற்பட்டது. அங்கே கம்யூனிசத்திற்கு மாறான புதிய அமைப்பு – ஜனநாயக அமைப்பு மக்கள் தேவையை அனுசரித்து இயங்கும் சந்தைப் பொருளாதாரம் தொடங்கியது.

காலம் கனிந்து வந்தபோது புதிய திசையில் கோர்பசேவ் தன் முத்திரையைப் பதித்தார். ஸ்டாலின் காலத்திலோ, குருச்சேவ் காலத்திலோ, பிரஷ்னேவ் காலத்திலோ இப்படி ஒரு மாற்றத்தைப் பற்றி எந்த கோர்பசேவும் பேசி இருந்தால் தூக்கில் போட்டிருப் பார்கள். சைபீரியாவின் மனநல மருத்துவமனைக்கு அனுப்பி இருப்பார்கள்.

வள்ளுவர் இதைத்தான் கூறுகிறார். "கொக்கொக்கக் கூம்பும் பருவத்து" என்று. "ஓடையில் சலசலவெனத் தண்ணீர் ஓடுகிறது. ஒரு பெரிய கொக்கு ஒற்றைக் காலில் ஆடாமல் அசையாமல் நின்று கொண்டிருக்கிறது. எத்தனையோ சிறிய மீன்கள் நீந்தி வருகின்றன. கொக்கு அசையக் கூட இல்லை. ஆனால், ஒரு பெரிய மீன் வந்தது. "சடார்!" கொத்தித் தூக்கியது.

"தம்பீ! கொக்கு போல, காலம் வரும்வரை காத்திரு. சரியான நேரம் என்று தெரிந்தவுடன் ஒரேயடியாகப் பாய்ந்து பிடி'' என்கிறார், திருவள்ளுவர்.

**தற்காலிக வெற்றி**

மற்றோர் முக்கியமான விசயம்.

"முன்னுக்கு வர விரும்பும் நீ தற்காலிக நன்மைகளில் கருத்து வைக்காதே. உடனடியாக லாபங்களில் ஆசைப்பட்டு இறங்காதே. அப்படி இறங்கினால், பின்னால் கஷ்டப்படுவாய்" என்பதுதான்.

ஒரு மனிதன் நிலம் விற்றான். சதுப்பு நிலங்களை — தண்ணீர் தேங்காத கோடை காலத்தில் கொண்டு காட்டி "அற்புதமான நிலம்" என்றான். நம்பினார்கள். விற்றவன். லாபம் சம்பாதித்தான்.

மழைக்காலம் வந்தது. மனை கட்டவேண்டிய பகுதியெல்லாம் தண்ணீர். பார்த்தார்கள், மக்கள். "நம்மை ஏமாற்றிவிட்டான்" என்று உணர்ந்தார்கள்; பேசினார்கள். அடுத்தவரிடம் சொன்னார்கள். "அவனிடமா? வாங்காதீர்கள். அவன் ஏமாற்றுக் காரன்!" என்றார்கள். அவன் பெற்ற லாபமெல்லாம் அந்த முதல் விற்பனையுடன் முடிந்தது. அதற்குப் பிறகு செல்லாக்காசுக்கு அவனுக்கு வியாபாரம் நடக்கவில்லை.

உடனடியாக லாபம் தற்காலிகம்; நிரந்தரமல்ல. ஆசையின் பின்னால் போகாதீர்கள்; உண்மையின் பின்னால் செல்லுங்கள். அதைவிட முக்கியமான மற்றோர் விஷயம் இருக்கிறது. தோல்வியில்லாத வாழ்க்கை இல்லை. கஷ்டங்கள் — சோதனைகள் என்று பலவற்றை நாம் சந்திக்க வேண்டியருக்கும்.

தெருவிலே வண்டியிலே வாழைப்பழத்தைப் போட்டுப் பாடிப் பாடி விற்கும் வாழைப்பழ வியாபாரி என்ன செய்கிறார்? பழம் நிறைய இருக்கிறது. விற்பனையோ அதிகம் இல்லை. பழமோ விரைவில் அழுகத் தொடங்கிவிடும். என்ன செய்வது?

"நான் சொல்வதுதான் விலை!" என்று அழுகும் வரை வைத்திருக்க முடியுமா? முடியாது! 'வந்தவரை லாபம்' என்று விற்க முயல்கிறார். இதன்மூலம் பெருத்த நஷ்டமடைவதைத் தவிர்க்கிறார்!

போர் நடக்கிறது. படைகளுடன் போய் நிற்கிறார் தளபதி. எதிரியோ எல்லா முனைகளிலும் வளைத்துவிட முயல்கிறான். என்ன செய்கிறார், ஒரு புத்திசாலி தளபதி? பின்வாங்குகிறார். எல்லாப் படைகளும் பிடிபட்டு, அடிபட்டுப் பெருந்தோல்வி அடைவதைத் தவிர்க்கிறார். இல்லாவிடில் படை முழுவதுமே அழிந்திருக்கும். முழு நாசம் ஏற்பட்டிருக்கும். தோல்வி வரும்போது கையைக் கழுவுவது தவறல்ல; ராஜதந்திரம்.

சிறு தோல்வியை ஏற்றுக்கொண்டு பெருந் தோல்வி ஏற்படாதவாறு கவனமாக செயல்படுங்கள் என்பதுதான் தோல்வி சொல்லித்தரும் பாடம்.

# 11

## தம்பீ! சிரித்துக்கொண்டே யோசனை செய்!

**தோ**ல்விகள் இல்லாத வாழ்க்கை என்பது உண்மையல்ல. நாம் எடுக்கும் ஒவ்வொரு முயற்சியிலும் வெற்றி பெற்றுக்கொண்டே இருப்போம் என்று நம்புவது மடமை. சில நேரம் மிகச் சிறிய விஷயமாக இருக்கும்; அதில்கூட நாம் தோற்றுப்போக நேரிடும். இத்தனைக்கும் நாம் பழுத்த அனுபவசாலியாக இருக்ககூடும்.

இத்தனை நாள் மிகுந்த புத்திசாலித்தனத்துடன் — மிகுந்த சாணக்கியத்துடன் — முயற்சிகளில் வெற்றி பெற்றிருக்கிறோம் என்பதை வைத்துக் கொண்டு, "நாம் எடுப்பதெல்லாம் வெற்றியாக அமையப் போகிறது" என்று நம்புவோமானால், நம்மைவிட முட்டாள் யாருமில்லை.

அதனால்தான் "யானைக்கும் அடிசறுக்கும்" என்று சொன்னார்கள்!

பள்ளியில் படிக்கும் புத்திசாலிக் குழந்தைகள் பலரைப் பார்த்திருக்கிறேன், நான். எனக்குத் தெரிந்த

ஒரு பெண், மிகுந்த கெட்டிக்காரி. எப்போதுமே முதல் மதிப்பெண்தான் வாங்குவாள். அவள் எப்படிப்பட்ட நிமிர்ந்த தலையுடன் தன் தோழிகளுடன் பழகுவாள் என்று நீங்களே கற்பனை செய்துகொள்ளலாம்! அப்படிப் பட்ட பெண்ணுக்கு ஒரு நேரம் முதல் மதிப்பெண் வரவில்லை. இரண்டாவது மதிப் பெண்ணும் வரவில்லை. மூன்றாவது இடத்தைப் பெற்றிருந்தாள். அவள் பெற்ற மதிப்பெண் 96. முதல் மதிப்பெண் 98 இரண்டாவது 97.

வழக்கமாக முதல் மதிப்பெண் பெறும் அந்தப் பெண், மனமுடைந்து போனாள். முகத்திலே துயரம். சரியாக சாப்பிடவில்லை. இரண்டு நாளாகத் தன் தோழிகளைப் பார்க்கவும், பேசவும் பிடிக்கவில்லை, அவளுக்கு.

இந்த மாற்றத்தைக் கண்டு, அவள் பெற்றோர் அதிர்ச்சி அடைந்தார்கள். "அம்மா! இது சாதாரணம்" என்றெல்லாம் சொல்லிப் பார்த்தார்கள். அவள் அசையவில்லை; இது 'இயல்பு' என்று அவள் எடுத்துக் கொள்ளவில்லை. பேரதிர்ச்சி அடைந்தாள். எல்லாருடைய மதிப்பிலும் தான் மிகவும் தாழ்ந்து போனதாக எண்ணி முடங்கிப் போனாள்.

அதனால்தான் சொல்கிறார்கள், மனவியல் அறிஞர்கள்: 'பட்டுப்பூச்சி கூட்டுக்குள் வளர்வது போல குழந்தைகளை கூட்டுக்குள் வளர்க்காதீர்கள். குழந்தைகள் எல்லாவித அனுபவங்களையும் பெறட்டும். காரிலே போய் பள்ளியில் இறங்கும் குழந்தை வீட்டுக்கு சில நாள் நடந்து வருவதிலிருந்து, கறிகாய் பேரம் செய்வதிலிருந்து, அநாதைக் குழந்தைகள் இல்லத்தையும் முடவர்கள்

இல்லத்தையும் பார்வையிடுவது வரை எல்லா அனுபவங்களையும் பெறட்டும்' என்கிறார்கள்.

எங்கள் வீட்டில் ஒரு சிறுவன் இருந்தான். கேரம் விளையாடுவான். இரண்டு முறை தோற்றுப் போனவுடன் "நான் விளையாட வரவில்லை" என்று முகத்தை சுருக்கிக்கொண்டு எழுந்துவிடுவான். என் நண்பர் தன் மனைவியோடு சீட்டு விளையாடும்போது தான் திரும்பத் திரும்பத் தோல்வியடைய நேர்ந்தால் சிரிப்பார்; ஆனால் விளையாட மாட்டார் "எனக்கு வேறு வேலை இருக்கிறது" என்று எழுந்து விடுவார்!

இவர்களிடம் இருக்கும் பொது குணம் என்ன? அவர்களால் தோல்வியை சகித்துக்கொள்ள முடியவில்லை — அதுதான் விஷயம். "தோல்வி என்பது வாழ்வின் ஒரு பகுதி. தோல்வி ஏற்படும்" என்பதை அவர்கள் முழுவதுமாக உணர்வதில்லை.

"மாவீரன்" என்று போற்றப்பட்ட நெப்போலியன் வாட்டர்லூ போரில் தோற்றுவிட வில்லையா? 'கிடுகிடு' என்று உலகையே வென்றுகொண்டு வந்த ஹிட்லர், ஒருநாள் தோற்றுப் போகவில்லையா? எல்லோர் வாழ்க்கையிலும் 'வாட்டர்லூ' எதிர்ப்படத்தான் செய்யும் என்பது இவர்களுக்குத் தெரிவதில்லை!

### என்ன செய்ய வேண்டும் ?

பட்டுப்பூச்சியின் கூட்டுக்குள் வளர்ந்தவர்கள் தொட்டால் சுருங்கியாக இருக்கிறார்கள். இப்படிப் பட்ட பழக்கத்திலிருந்து இவர்களை மீட்க நாம் என்ன செய்யலாம்?

இளவயதிலேயே எதையும் சகஜமாக ஸ்போர்டிவ்' ஆக) எடுத்துக்கொள்ளும் விளையாட்டு

வீரனின் மனோபாவத்துடனே இவர்களைப் பழக்க வேண்டும்.

விளையாட்டு வீரன் தோல்வி வரும்போது என்ன செய்கிறான்? சிரிக்கிறான்! தன்னைத் தோற்கடித்த தன் எதிரியிடம் சென்று கை குலுக்குகிறான்; பாராட்டுகிறான். ஆனால் -

மனதிற்குள் சொல்லிக் கொள்கிறான்: "இந்த முறை நீ! அடுத்த முறை நான்!" என்று அடுத்த விளையாட்டுக்கு தன்னைத் தயார் செய்து கொள்கிறான்.

"இடுக்கண் வருங்கால் நகுக" என்றார், வள்ளுவர். ஏன்? துன்பத்தைக் கண்டு அழுதால் சோர்ந்து போவோம். சிரித்தால் புதுவலிமை பெறுவோம். அது அடுத்த முயற்சிக்கு ஆதாரமாக அமைந்து, வெற்றி தரும். அதுபோல, தோல்வியைக் கண்டு நகைக்க வேண்டும்! அந்த நகைப்பு நமக்குப் புதுவலிமை தரும்! அடுத்த முறை வெற்றி தேடித் தரும்!!

**ஓடிவிளையாடு !**

தோல்வியிலும் சிரிக்கும் விளையாட்டு வீர மனோபாவத்தை நாம் நம் குழந்தைகளிடம் வளர்ப்பதில்லை. "படி படி" என்று படிப்புக்கு முதன்மை கொடுக்கிற அளவுக்கு விளையாட்டு, போட்டி, பந்தயங்களுக்கு அவ்வளவு முக்கியம் கொடுப்பதில்லை.

விளையாட்டு எத்தகைய மனப்பழக்கத்தை ஏற்படுத்துகிறது என்பதன் முழு கனத்தையும் நமது கல்வியாளர்கள் உணர்ந்ததாகத் தெரியவில்லை.

விளையாட்டு உடல் வலிமையைக் காட்டுகிறது. உடல் வலிமை, மனதில் தெம்பை ஊட்டுகிறது.

முயல வேண்டும் என்ற ஆர்வத்தைத் தூண்டுகிறது. வெற்றி-தோல்விகளை சமமாக எடுத்துக் கொள்ளும் மனோபாவத்தை வளர்க்கிறது.

நாம் தோற்றாலும் வெற்றி பெற்றவனை மனமாரப் பாராட்டும் நல்ல குணத்தை வளர்க்கிறது. எல்லாவற்றுக்கும் மேலாக வாழ்வில் வரும் சிக்கல்களை எல்லாம் விளையாட்டுப் பந்தயமாக எடுத்துக்கொள்ளும் மனோபாவத்துடன் அணுகும் பக்குவத்தை .நமக்குக் கற்றுக் கொடுக்கிறது. எனவேதான் பாரதியார்— "ஓடிவிளையாடு பாப்பா" என்று பாடினார்!

## வாழ்க்கையே ஒரு விளையாட்டு!

வாழ்க்கையே ஒரு விளையாட்டு என்று எடுத்துக்கொள்ளுங்கள். எவ்வளவு நெருக்கடி வந்தாலும், எதிர்கொள்ளத் தயாராகுங்கள்!

தம்பி! வாழ்க்கையை ஒரு விளையாட்டுப் பந்தயமாக எடுத்துக்கொள். தோல்வியைக் கண்டு சிரி. 'அடுத்தமுறை நான்தான் வெற்றிபெறப் போகிறேன்' என்று போராடு; விளையாடு; நடமாடு!

வாழ்க்கையும் ஒரு விளையாட்டுதான்! அது தான் சரியான அணுகுமுறை.

மாலை நேரங்களிலே விளையாடு. உடலையும் வளர்த்துக்கொள். தோல்வியை சமாளிக்கும் மனப் பழக்கத்தையும் வளர்த்துக்கொள். வெற்றியைக் கண்டு உன்னைப் பற்றியே பெருமைப்படும் மகிழ்வையும் வளர்த்துக்கொள்.

## தோல்வி ஏற்பட்டால்!

தோல்வியை எதிர்பார்த்து யாரும் செயல்படுவதில்லை. "தோல்வியே வா!" என்று யாரும் வருந்தி அழைப்பதில்லை. ஆனால் வந்துவிட்டால், அதை விளையாட்டு வீரன் போல சிரித்துக்கொண்டே ஏற்றுக்கொள்.

தோல்வியை எடுத்துக்கொள்வதில்தான் — கையாளுவதில்தான் — மனிதர்கள் வேறுபடுகிறார்கள்.

தோல்வி எனக்கு ஏற்படும்போது நான் என்ன சிரிக்கிறேனா? சிரிக்க முயல்கிறேன்! அவ்வளவுதான்!

நானும் எல்லோரையும் போன்ற மனிதன்தான். எனக்கும் வருத்தம் ஏற்படுகிறது. அழுகை வருகிறது. எல்லாரும் என்ன நினைப்பார்கள்? என்கிற அவமான உணர்வுகள் எல்லாம் எழுகின்றன.

எல்லாம் கொஞ்ச நேரம்தான்! நான் மீண்டும் பழைய மனிதனாக வெளிவருகிறேன். உற்சாகமான மனிதனாக! நம்பிக்கை கொண்ட தலைவனாக! "யாரும் என்னை அடித்து விட முடியாது!" என்று எனக்கு நானே சொல்லிக் கொள்கிறேன்.

தோல்வி ஏற்படும்பொழுது மனவுறுதி குலைந்தது உண்மை. ஆனால் அது தற்காலிகம்! இதோ மீண்டும் எழுந்துவிட்டேன்.

வாழ்க்கை இருக்கும்வரை அது ஒரு இனிமையான விளையாட்டுப் போட்டிதான்; போராட்டம்தான்!

## வெற்றி பெறுவது எப்படி?

பலமுறை ஓட்டப்பந்தயங்களில் வெற்றி பெற்ற ஒரு வீரனிடம், "ஓட்டப்பந்தயத்தில் வெற்றி பெற

என்ன செய்ய வேண்டும்?'' என்று ஒரு இளைஞன் கேட்டான். அதற்கு வீரன் சொன்னான்: "முதலில் பந்தயத்தில் கலந்துகொள்ள வேண்டும்!''

நமது வாழ்க்கையும் — நமது முயற்சிகளும் ஒரு ஓட்டப் பந்தயந்தான். அதில் நாம் வெற்றி பெற வேண்டுமானால், முதலில் பந்தயத்தில் கலந்து கொள்ள வேண்டும்!

இரண்டாவதாக, எந்தப் பந்தயத்திலும் வெற்றி-தோல்வி உண்டு என்பதை உணர வேண்டும். ஒரு நாணயத்துக்கு இரு பக்கம் உண்டு அல்லவா? தோல்வி கண்டு துவண்டுவிடாமல், அடுத்த பந்தயத்துக்கு முயற்சி செய்ய வேண்டும். "வெற்றியும் தோல்வியும் வீரனுக்கு அழகு'' என்பார்கள். அந்த வீரனாக நாம் விளங்க வேண்டும்! அடுத்து முயன்றால் ஆகாதது ஒன்றில்லை!

வீரன், தோல்வியிலும் வெற்றிக்கான விதையைக் காண்கிறான்; எனவே அவனுக்கு தோல்வியும் வெற்றிதான்! யானை படுத்தாலும் குதிரை மட்டம் அல்லவா?

## 12

# துணிந்து இறங்கு, தம்பி!

தம்பீ! மகளே! நீ முன்னுக்கு வரமுடியாது என்று யார் சொன்னது? நீயேதான் நினைத்துக் கொண்டிருக்கிறாய்! 'என்னால் முடியுமா?' என்ற சந்தேகம். 'எனக்குப் படிப்பில்லையே' 'நான் ஏழையாயிற்றே' என்ற தாழ்வு எண்ணம். "எனக்கு சாமர்த்தியம் இல்லையே!" என்றுகூட தங்களைப் பற்றி சிலர் நினைத்துக் கொள்கிறார்கள்.

சாமர்த்தியம், புத்திசாலித்தனம், திறமை, வியூகம் என்று எதை எடுத்துக்கொண்டாலும் சரி, எதுவுமே கற்றுக்கொள்ளக் கூடியதுதான். சிலருக்கு இயல்பாக சில குணங்கள், திறமைகள் இருக்கும். மற்ற பலருக்கு அந்த குணங்கள் இல்லாமலிருக்கலாம். ஆனால்-

என்றைக்கு நாம் "இது என்னிடம் இல்லை. இது தேவை. நான் கற்றுக் கொள்ளப் போகிறேன். என்னை மாற்றிக்கொள்ள முடியும்" என்று எண்ணுகிறோமோ, அன்று நம்மால் சாமர்த்தியத்தை யும் சரி, புத்திசாலித்தனத்தையும் வியூகத்தையும், கற்றுக்கொள்ள முடியும்.

## செயல்படு !

என்று நாம் நம்மைப் பற்றிய உண்மை நிலையை உணர்கிறோமோ, உணர்ந்து அதிலிருந்து மாற வேண்டும் என்று ஆசைப்படுகிறோமோ அதுதான் நமது மாற்றங்களுக்கு விதை. அது இருந்தால் போதும். வெறும் விதைதானே தண்ணீர் இலலாமல் கிளம்பாதது போல, நமது ஆசைக்கு நாம் செயல் வடிவம் என்ற தண்ணீர் கொடுக்க வேண்டும். உழைக்க வேண்டும். செயல் இல்லாமல் உழைப்பு இல்லாமல், பாடுபடாமல் பலன் ஏதும் கிடைப்பதில்லை.

உழைப்பு என்பது மனித இயல்பு. உழைக்கத் தான் கடவுள் நமக்குக் கைகளைக் கொடுத்திருக்கிறார். உழைப்பு நம்முடன் பிறந்திருக்கிறது. இந்த உடல் உழைக்கவே. உழைப்பதன் மூலம் வலிமை பெற பலன் பெற முடியும்.

உழைப்பு என்பது ஓடுகிற ஆற்றைப் போன்றது. உழைப்பவன் முன்னேறுகிறான். உழையாத சோம்பேறி தேங்கிய சாக்கடை போல ஆகிவிடுகிறான்.

நமக்கு ஆசை இருக்கிறது. நம்மிடம் இயல்பாகவே உழைக்கும் இயல்பும் இருக்கிறது. பின் ஏன் நாம் வாழ்வில் முன்னேறுவதில்லை?

மிக முக்கியமாக, 95 சத மக்களிடம் ஆசை இருக்கிற அளவுக்கு — உழைக்கும் திறமை இருக்கிற அளவுக்கு — எதையும் தானாக செய்யும் குணம் இல்லை. தானாக இறங்கி செயல்படுவதில்லை.

## குளத்தில் குதி !

நீந்த ஆசைதான். மற்றவர்களைப் போல் அவர்களிடமும் கைகளும் கால்களும் இருக்கின்றன. அவற்றை வைத்துக்கொண்டு தண்ணீரை லாவகமாகத்

தள்ளமுடியும். ஆனாலும், குளக்கரை முன் போய் நிற்கிறார்களே ஒழிய, தண்ணீரில் இறங்குவதில்லை. காரணம் பயம்! “தெரியாது” என்ற பயம்! மூழ்கிவிடு வோமோ என்ற பயம்! முதலை விழுங்கிவிடுமோ என்ற பயம்!

அந்தப் பயத்தை விடுங்கள். பயந்தான் முன்னேற்றத்தின் முதல் எதிரி.

நீந்தக் கற்றுக்கொள்ள நாமாகத் தண்ணீரில் இறங்க வேண்டியதுதான். முதலில் முழங்கால் அளவு தண்ணீரில் நின்று கையையும் காலையும் உதைத்துக் கொள்ள வேண்டும். அல்லது பயிற்சி உள்ளவர்கள் உதவ — அவர்கள் நம் அடிவயிற்றையும் மார்பையும் தாங்கிக்கொள்ள — நாம் கையையும் காலையும் துடுப்பு போல அசைக்கக் கற்றுக்கொள்ள வேண்டும்.

நாமாக இறங்கிக் கற்றுக்கொள்ள முன்வராத வரையில் நம் ஆசையோ, உழைப்போ பலன் தராது.

தம்பீ! நீ நீந்தக்கூடாது, குளத்தில் இறங்கக் கூடாது என்று உலகமா சொல்கிறது? தடுத்து வைத்திருக்கிறது? இல்லை. நம்மை நாம்தான் தடுத்து வைத்திருக்கிறோம்! அதாவது, நாம் இறங்குவதில்லை. நாம் செயல்பட முன்வருவதில்லை.

ஏரி, குளம், ஆறு, கண்மாய் ஆபத்தானது என்று அதன் மீது பழி போடுகிறோம்! ஏரியும் குளமும் நமக்கு ஆபத்து விளைவிக்கவா காத்திருக்கின்றன? அவை தன்பாட்டுக்கு இருக்கின்றன! நாம்தான் அவற்றைக் குறை சொல்கிறோம்!

**மயிலே! மயிலே!!**

கொல்லையிலே மாமரம் இருக்கிறது. அதிலே மாங்காய் இருக்கிறது. பறித்தால் உப்பைத் தொட்டுக்

கொண்டு புளிக்கப் புளிக்கத் தின்னலாம். எப்போது? நாம் பறிக்கும்போது. அலகு இருந்தால் பறிக்கலாம். கல் இருந்தால் அடிக்கலாம். நண்பர்கள் ஒருவர் தோளில் ஒருவராக ஏறி நின்று பறிக்கலாம். இப்படியாக செயல்பட வேண்டும். மரம் குனிந்து, கிளை வளைத்து, மாங்காய் தராது!

"மரமே! மரமே!" என்றால், மாங்காய் போடாது! எடு, கல்லை! அடி, மாங்காயை!!

'மயிலே! மயிலே!' என்றால், இறகு போடாது. நாம்தான் கடையில் விற்றால் வாங்க வேண்டும்.

"செய்! அல்லது செத்து மடி!" என்றல்லவா சொல்கிறார்கள்!

காற்று இல்லை என்றால் என்ன செய்கிறோம்? மின்விசிறி — பனை விசிறி கொண்டு காற்றை வரவழைக்கிறோம்! அல்லது, காற்றோட்டமான கடற்கரை, ஏரிக்கரை, வயல்வெளியைத் தேடிப் போகிறோம்! 'காற்று இல்லை' என்று சும்மா இருந்துவிடுவது இல்லையே! 'வேலை இல்லை! வாய்ப்பு இல்லை!' என்று பழி போடாதே! வேலையை உண்டாக்கிக் கொள்! வேலையைத் தேடிப் போ! செயல்படு! முன்னேற்றம் உன்னைத் தேடி வரும்!!

உன் கையை நம்பு! தன்னம்பிக்கை கொள்!!

## அமெரிக்காவுக்கு

நாம், நம்மாலானதைச் செய்ய வேண்டும்; நம்மை நம்பி முனைய வேண்டும்; செயல்பட வேண்டும். சூழ்நிலை தானே மாறும். என் வாழ்க்கையில் கூட.....

எனக்கு அமெரிக்கா செல்ல ஆசை — மேற்படிப்புக்காக. "நீயா?" என்றார்கள். "வெறும்

பி.எஸ்சி. பட்டத்துடனா?'' என்றார்கள். என் உயரத்தைப் பார்த்தார்கள். என் நிறத்தைப் பார்த்தார்கள். என் பெற்றோரைப் பார்த்தார்கள். என் கிராமத்தைப் பார்த்து நகைத்தார்கள்.

அமெரிக்க பல்கலைக் கழங்களுக்கு கடிதம் போடும்போது கூட மற்ற ஆசிரியர்களுக்கு தெரியாமல் — என் உறவினர்களுக்குத் தெரியாமல் செய்வேன். அவ்வளவு ஏளனம் — அதைரியப்படுத்தும் நகைப்பு.

அதை எல்லாம் நான் லட்சியம் செய்ய வில்லை. என் நோக்கம் மீது குறியாக இருந்தேன். தொடர்ந்து செயல்பட்டேன். மேலே மேலே படித்து - மேலும் பட்டங்கள் பெற்று - என்னை வலிவாக்கிக் கொண்டேன். என் சம்பள பணத்தை சேமித்து விமான டிக்கெட்டு வாங்கினேன். அமெரிக்காவில் உள்ள பல பல்கலைக் கழகங்களுக்கும் நான் விண்ணப்பம் செய்தேன்.

அமெரிக்காவிலிருந்து எனக்கு அழைப்பு வந்தது. உடனே பல பேராசிரியர்கள் எனக்கு சிபாரிசுக் கடிதம் கொடுக்க முன் வந்தார்கள். ஒரு உறவினர் நான் விமான டிக்கெட்டு வாங்கப் பணம் கடனாகக் கொடுக்க முன் வந்தார். ''அமெரிக் காவுக்குப் போகும் மூஞ்சியைப் பார்'' என்று ஏளனம் செய்தவர்கள், 'நீ எப்படியும் அமெரிக்காவுக்குப் போவாய் என்பது எனக்குத் தெரியும்'' என்று என்னைப் பாராட்டினார்கள்.

எப்படி ஏற்பட்டது இந்த மாறுதல்?

நான் செயல்பட்டேன்!

"என்னை நம்பி'' நான் செயல்பட்டேன்!

இதைத்தான் தம்பீ உனக்கும் சொல்லுகிறேன். செய்! செயல்படு! உன்னை நம்பு! 'இந்த உலகத்தில்

நான் பெரிய ஆள் ஆவேன்' என்று கற்பனை செய்து கொள்! எண்ணிய எண்ணியாங்கு எய்துப எண்ணியர் திண்ணியர் ஆகப் பெறின்! எனவே, எண்ணத்தில் உறுதி கொள்! உறுதிகொண்ட நெஞ்சத்துடன் செயல்படு!! செய்! செய்! செய்!! அதன்பின் முன்னே கேலி செய்தவர்கள்கூட உனக்கு மாலை மரியாதை செய்வார்கள்!

**காதலிப்பது சுலபமில்லை!**

தானாக செயல்பட வேண்டிய அவசியத்தை என் நண்பர் பரஞ்சோதி வேடிக்கையாகக் கூறுவார்:-

"ஒரு பெண்ணைக் காதலிப்பது சுலபம் என்று எண்ணிக் கொண்டிருந்தேன். நான் விரும்பிய பெண்ணைக் கண்டபோது — அவள் அன்பைப் பெற நான் எவ்வளவு முயற்சி செய்ய வேண்டும், என்னவெல்லாம் செய்தேன், என்பதை எண்ணிப் பார்த்தால், இன்றும் எனக்கு பிரமிப்பாக இருக்கிறது."

"ஒவ்வொரு சந்திப்பிலும் அவளது அன்பை யும் அங்கீகாரத்தையும் பெற நான் முயல்வேன். நான்தான் நடவடிக்கை எடுக்க வேண்டும்; நான்தான் வியூகம் வகுக்க வேண்டும். எனக்காக இதை அடுத்த வீட்டுக்காரரர் வந்து செய்ய முடியாது!"

அதுதான் உண்மை!

உங்களால் முடியும்!

பிறரை சார்ந்திருக்க வேண்டியதில்லை!!

துணிந்து இறங்குங்கள்!

"துணிந்தவனுக்கு வெட்கமில்லை" என்பது பழமொழி. "துணிந்தவனுக்குத் தோல்வியில்லை" என்பது புதுமொழி! இறங்கியவனுக்கு சமுத்திரம் முழங்கால்!

## 13

# மனம்போல வாழ்வு, தம்பி!

கடலிலே காற்று ஒரு பக்கமாக வீசிக் கொண்டிருக்கிறது. இருந்தாலும் ஒரு பாய்மரக் கப்பல் - காற்றுவாக்கில் கிழக்கே போய்க் கொண்டிருக்கிறது. மற்றொன்று மேற்கே போய்க் கொண்டிருக்கிறது — அதாவது, எதிர் திசையில்.

காற்று ஒரு பக்கமாக வீசினாலும், எப்படி கப்பலை எதிர் எதிர் திசைகளில் செலுத்துகிறார்கள்?

பாய்மரத் துணியை எப்படி அமைத்திருக் கிறார்கள் என்பதன் மூலம் நாம் திரும்பும் திசையில் கப்பலைச் செலுத்தலாம்.

இதே அதிசயம்தான் நம் மனதிலும் நிகழ்கிறது. வெளி உலக நிகழ்ச்சி ஒன்று நடக்கிறது. நீங்கள் அதைப் பார்த்து "என்ன செய்வேன்" என்று பயந்து இடிந்து போய் உட்காரலாம். மாறாக, மேற்கு திசையில் போகும் கப்பல் போல "என்னால் சாமர்த்தியாமாக எதிர் நீச்சல் போட முடியும்" என்றும் சொல்லலாம்.

நிகழ்ச்சிகளை எப்படி எடுத்துக் கொள் கிறோம் என்பதில்தான் விசை இருக்கிறது. வெற்றியும்

தோல்வியும் நமது மனோபாவத்தைப் பொறுத்திருக் கிறது. வெற்றி பெறுவோம் என்கிற நம்பிக்கை வெற்றியைத் தருகிறது. "தோல்வி அடைவேனோ?" என்கிற பயம், தோல்வியைப் பற்றிய கற்பனைகளை யும், அதன் விளைவுகளையும், மனதில் எழுப்புகிறது. அதுவே தோல்வி அடையக் காரணமாகவும் அமைகிறது. இதைத்தான் "மனம் போல வாழ்வு" என்றார்கள்.

### காலில் கட்டு

நம் காலிலே ஒரு காயம். கட்டுப் போட்டிருக்கிறோம். காலில் இடித்து விடுவோமோ என்று பயந்துகொண்டே நடக்கிறோம். அதே காலில் இடிக்கிறது. ஏன்? நாம் எதிர்ப்பார்க்கிறோம். அதுவே நிகழ்கிறது. அதனால்தான் ஒரு தமிழ்ப் பழமொழி சொல்கிறது. "பட்ட காலிலே படும். கெட்ட குடியே கெடும்" என்று.

"காயம் பட்டு, கட்டுப் போட்டிருக்கிறோம்" என்று பயந்து அதன் நினைவாகவே நடந்தால் அதுதான் நிகழ்கிறது. அதுபோல, மனம் எதை எதிர்பார்க்கிறதோ, அதை அடைகிறது. "மனம் இருந்தால் மார்க்கம் உண்டு" என்பதும் இதைத்தான்.

அதுபோல, சில பணக்காரக் குடும்பங்கள் சில நேரம் சரிவதை — அழிந்து போவதைப் பார்க்கிறோம். முதலில் ஒரு தோல்வி வருகிறது; ஒரு நஷ்டம் — கஷ்டம் வருகிறது.

"ஐயோ! எனக்கு கெட்ட காலம் வந்துவிட்டது. ஏழரைநாட்டு சனி பிடித்துவிட்டது. இனி நான் தொட்டது துலங்காது; வைத்தது விளங்காது" என்று தோல்வி மனப்பான்மை

கொள்ளுகிறார்கள். முன்னேறப் பயப்படுகிறார்கள். மீண்டும் நஷ்டம் வருமோ என்று கற்பனை செய்து நடுங்குகிறார்கள். கஷ்டத்தைக் கண்டு நடுங்க நடுங்க, அதுதான் வந்து சேரும். மேலும் கஷ்ட நஷ்டங்கள் வந்து சேர, "கெட்ட குடியே கெடும்" என்கிறோம்.

கஷ்டம், நஷ்டம் ஏற்படும்போது அதன் விளைவுகள் நம்மைப் பாதிக்கும்தான். ஆனால், நாம் கஷ்டத்தையும் நஷ்டத்தையுமே மீண்டும் மீண்டும் எண்ணி, ஆலாபனை செய்யாமல், அழுதுகொண்டிராமல் 'இதிலிருந்து மீள்வேன்' என்று சொல்லிக் கொண்டு அதற்கான வழிமுறைகளில் இறங்க வேண்டும். அப்போதுதான் தோல்விப் பாதையிலிருந்து — துன்பங்களின் தொடர்ச்சியிலிருந்து நாம் மீள முடியும்.

## பெரிய உண்மை

இன்றைய மனவியல் அறிஞர்கள் சொல்கிற ஒரு பெரிய உண்மை — நாம் தெரிந்துகொள்ள வேண்டிய அரிய உண்மை — இதுதான்.

ஒரு தோல்வி ஏற்படும்போது "அடடா! இப்படித்தான் முன்பு ஏற்பட்டது. இப்போதும் அதேபோல நடக்கிறது. எல்லாம் என் கஷ்ட காலம். என் ஜாதகம் இப்படித்தான்!" என்று பழைய தோல்விகளை எல்லாம் வரிசைப்படுத்தி "நான் எப்போதுமே துரதிருஷ்டக்காரன்" என்று நமக்கு நாமே முத்திரை குத்த முயல்கிறது, மனம். அப்படிப்பட்ட சிந்தனைகளில் நாம் மூழ்கி விடுகிறோம். அது தவறு. இது ஒரு மன நோய் என்று கூட சொல்லுகிறார்கள்.

"ஏதோ இந்த முறை தவறிவிட்டேன். பரவாயில்லை" என்று எடுத்துக்கொள்ள வேண்டும். "தோல்வியின் காரணத்தைப் புரிந்துகொண்டு விட்டேன்! இனி என்னால் சமாளிக்க முடியும்" என்ற நம்பிக்கை கொள்ள வேண்டும்.

வள்ளுவர் ஒரு காட்சியைக் காட்டுகிறார். ஒரு மாட்டு வண்டி. அது சேற்றில் சிக்கிக்கொள்ளுகிறது. அப்பொழுது மாடு என்ன செய்கிறது? மண்டியிட்டு, முழுமூச்சுடன் முயன்று வண்டியை இழுத்துச் செல்லுகிறது. அந்த மாடு போன்ற முயற்சி உடைய வர்கள், தோல்விக்குத் தோல்வி தருவார்களாம்; தோல்வியை வெற்றியாகக் காண்பார்களாம். (குறள் 624).

### என் அனுபவம்

தோல்வியை சமாளித்து வெற்றி பெறும்போது அந்த வெற்றியை நன்றாக நினைவில் வைத்துக்கொள்ளுங்கள்.

அமெரிக்காவில் நாங்கள் இறங்கிய முதல் தொழில் உணவுப்பொருள் தயாரிப்பு. இடை வேளையில் சாப்பிடும் 'நொறுக்குத் தீனி' போன்ற உணவுப் பொருளை தயாரித்தோம். தரமான பொருள்; நல்ல சுவை. ஆனால் வித்தியாசமான பொருள்; எனவே மக்கள் தயக்கத்துடன் வாங்கிப் பார்த்தார்கள். விற்பனை மந்தமாகத்தான் இருந்தது.

நகரத்தின் மிகப்பெரிய அங்காடியின் நிர்வாகியை சந்தித்தோம். 'பாக்கிங்' செய்யப் பட்டிருக்கிற அழகைக் காட்டினோம். பிரித்தோம். அவருக்கு எடுத்து சுவை பார்க்கக் கொடுத்தோம். சாப்பிட்டார். மேலும் சாப்பிட்டார். 'உம்' என்றார்.

முகத்திலே மகிழ்ச்சியும் சிரிப்பும் பரவின. "எங்களுடைய எல்லாக் கடைகளிலும் கொண்டுபோய் அடுக்குங்கள்!'' என்றார். நாங்கள் பூரித்துப் போனோம்!

எத்தனையோ இடங்களில் எங்களுக்கு விற்பனை இல்லை என்றாலும், இந்த வரவேற்பு எங்களை மேகக் கூட்டத்தில் மிதக்கச் செய்தது. அதற்குப்பிறகு நான் எங்கு பொருளை விற்கப் போனாலும் அந்தப் பெரிய கடையில் என்ன நிகழ்ந்தது என்பதைத்தான் நினைத்துக் கொள்வேன். அவர் என்ன சொன்னார் என்பதைத்தான் புதிய இடங்களில் சிரிக்கச் சிரிக்கக் கூறுவேன்! கேட்க வேண்டுமா. விற்பனைக்கு?

பாடம் என்ன?

தோல்வியிலிருந்து மீள, வெற்றி பெற நீங்கள் அனுபவித்த – உங்களுக்கு ஏற்பட்ட வெற்றியான நிகழ்ச்சிகளை நினைவில் கொள்ளுங்கள். ஒரு புது இடத்திற்குச் செல்லும்போது அதை நினைவில் கொண்டு அதே மன நிலையில் செல்லுங்கள். வெற்றி மனோபாவம் வெற்றி தருகிறது. பழைய வெற்றி ஒரு நிரூபிக்கப்பட்ட செப்பனிடப்பட்ட பாதை. அதை நினைப்பதன் மூலம் அந்தப் பாதையிலேயே சென்று அதே போல வெற்றியடையும் ஒரு நிலையை நமது மனம் ஏற்படுத்தித் தருகிறது.

## வெற்றியாளருடன் பழகுங்கள்!

வெற்றி என்பது, இராமகிருஷ்ணர் சொல்வது போல, ஒரு சங்கம். அதாவது "வெற்றியடைய வேண்டுமானால் நீ எப்போதும் வெற்றியாளர்களுடன் சேர்ந்திரு. வெற்றி அடைந்தவர்களுடன் உறவாடு.

அவர்களுடன் பேசு, பழகு'' என்பார், இராமகிருஷ்ணர்.

வெற்றியடைந்திருப்பவர்களுடன் பழக — பேச நாம் முயன்றால் — அவர்களுக்கு நேரம் இல்லாமல் போகலாம். அப்பொழுது வெற்றி யாளர்கள் எழுதிய அனுபவ நூற்களைப் படிக்கலாம். நூற்கள் நமக்காக நேரம் எடுத்துக்கொண்டு நமக்கு வேண்டியதை சொல்கின்றன; அறிவுரை தருகின்றன. வெற்றிக்கு வழிகாட்டும் நூற்கள் நமது வெற்றிப் பாதைக்குக் கைகாட்டிகளாக விளங்குகின்றன.

உலகில் இருளும் ஒளியும் இருப்பது போல, இறப்பும் பிறப்பும் இருப்பது போல, இன்பமும் துன்பமும், வெற்றியும் தோல்வியும் இருக்கின்றன. இது உலகின் மாறாத இயற்கை.

இருள் வரும்போது விளக்கு எரித்து இருளைக் குறைத்துக்கொள்வது போல, துன்பம் வரும்போது சிரித்து துன்பத்தை நாம் குறைத்துக்கொள்ள முடியும். அவ்வளவுதான் — அதுதான் நம் கையில் இருக்கிறது. அதுபோல, தோல்வி ஏற்படும்போது நாம் அதை லேசாக எடுத்துக்கொண்டு மீளும் வழிமுறைகளைக் காண முற்பட வேண்டும்.

**நல்ல மனநிலை**

நல்ல வளமான உடல்நிலை இருக்கும்போது தான் நாம் ஓட்டப் பந்தயத்தில் கலந்துகொள்ள முடியும். அதுபோல மனம் நல்ல நிலையில் இருந்தால் தான் — அமைதியான நிலையில் இருந்தால்தான் — நமக்கு உதவும். அப்படி அமைதியான நிலையைப் பெற நமது பாரங்களை எல்லாம் மனதிலிருந்து இறக்கி வைப்பது நல்லது. இறக்கி வைக்க நல்ல வழி நாம்

தினந்தோறும் 'டயரி' எழுதுவதுதான். நமக்கேற்பட்ட கஷ்டங்களையும், மன உளைச்சல்களையும் எழுதும் போது பாரம் குறைகிறது.

நமக்கு வேண்டிய மனிதர்களிடம் — அத்தை, பாட்டி, மாமா, நண்பர் என்பவர்களிடம் நமது பிரச்சினைகளைச் சொல்லி, ஆலோசனை கேட்கும் போது, நம் பாரம் இறங்குகிறது.

மற்றோர் முறை : நமது பிரச்சினைகளையும் சங்கடங்களையும் ஆண்டவனிடம் ஒப்புவித்துவிடுவது தான். "நீயே கதி! நீ பார்த்துக்கொள்!" என்று கேட்டுக் கொள்வதுதான். இதனால் நமது பாரம் குறைகிறது. இதை சரணாகதி தத்துவம் என்பார்கள்.

"யார்! தனக்குத்தானே உதவ முன் வருகிறானோ அவனுக்குத்தான் கடவுள் உதவுகிறார்" என்கிற பழமொழியையும் கொஞ்சம் நினைவில் கொள்ளுங்கள்.

உழையுங்கள்! உற்சாகத்துடன் உழையுங்கள்! ஒரு மாபெரும் சக்தி நமக்கு துணையிருக்கிறது என்பதை உணர்ந்து உழையுங்கள். வெற்றி நிச்சயம்!

14

## தம்பீ! மாறட்டும் மனோபாவம்!

ஒரு மடாதிபதி இருந்தார். பதவிக்கு வருமுன் அவரை உலகம் அறிந்திருந்தது. பதவிக்கு வந்தபின்னும் அவர் இருக்கிறார்; எனினும் உலகம் அறியவில்லை. உலகம் அவரை அறியாதபோது எப்படி மடாதி பதியாக சைவத்தைப் பரப்ப முடியும்? பதவிக்கு வருமுன் அவர் உலக விஷயம் தெரிந்தவராக இருந்தார். பதவிக்கு வந்தபின் பூஜை செய்வதிலும் கணக்கு வழக்குப் பார்ப்பதிலுமே காலத்தை செலவிட்டார்.

பதவி என்பது ஒரு அரிய வாய்ப்பு. பதவி பெற்றவுடன் அதை எதற்காகப் பெற்றோம் என்பதையே பலர் மறந்துவிடுகின்றனர். என்று லட்சியம் மறக்கப்படுகிறதோ அன்று முக்கியமல்லாத விஷயங்கள் முக்கியம் பெறுகின்றன. கொஞ்ச காலத்தில் பதவி ஒரு சுமையாகப் போய்விடுகிறது.

பற்றற்ற ஒரு துறவி — இறைபணி செய்யும் ஒரு நல்லவர் — ஏன் தோற்றுப்போனார் என்று நான் யோசிப்பதுண்டு.

“பதவி ஒரு வாய்ப்பு” என்று இத்தனை நாள் எண்ணி இருந்தார். இன்று பதவியை வாய்ப்பாகக் கருதவில்லை. சுமையாகக் கருதுகிறார்; வேதனையாகக் கருதுகிறார்.

அதாவது பார்க்கும் விதம் மாறிவிட்டது!

அணுகுமுறை மாறிவிட்டது!

சுமையாகப் பார்த்தால் — பிரச்சினையாகப் பார்த்தால் — பதவி தன்னை எதுவும் செய்ய விடுவதில்லை என்று எண்ணினால் — அது தோல்வியாகத்தான் முடியும்.

நாம் பார்ப்பதற்கேற்ப நம் மனம் முடிவு செய்கிறது.

நாம் பார்க்கும் விதம் நம்மை செயல்படத் தூண்டுகிறது. அல்லது நம்மை செயலிழக்கச் செய்கிறது.

**சிறைச்சாலை**

மற்றோர் எடுத்துக்காட்டு —

அது ஒரு சிறைச்சாலை. அங்கே கைதிகள் இருக்கிறார்கள். “இத்தனை ஆண்டுகள் இங்கே இருக்க வேண்டும்” என்று தீர்ப்புக் கூறப்பட்டு சிறையிலே காலம் கழிக்கிறார்கள். உட்கார்ந்து கொண்டு தங்கள் அவல நிலையை எண்ணுகிறார்கள். தங்களை முடக்கி வைத்திருக்கும் சிறை சுவர்களைப் பார்த்து வெதும்பு கின்றவர். “என்று வெளியே வருவோம்” என்று நாளை எண்ணுகிறார்கள்.

சிறைக்குள்ளே மற்றோர் மனிதர். அவர்தான் சிறை வார்டர். அவரும் சிறைக்குள்ளேதான் வசிக்கிறார். அதே கம்பிகள், அதே கோட்டைச் சுவர்கள், அதே சாப்பாடு.

இரண்டு பேரும் இருக்கிற இடம் சிறைதான். ஒருவரோ கைதியாக; மற்றொருவரோ காவலாளியாக, அவர்கள் பார்க்கும் விதம் — அவர்கள் கண்ணோட்டம் எவ்வளவு மாறுபட்டது என்பதைக் கவனியுங்கள். சிறையிலே இருந்தாலும், அங்கே பகவத் கீதைக்கு விளக்கம் எழுதியவர்கள் இருக்கிறார்கள். வக்கீலுக்குப் படித்தவர்கள் இருக்கிறார்கள். பட்டம் பெற்றவர்கள் இருக்கிறார்கள். சிறைக்குள்ளே பிறருக்கு உதவியாக உழைத்து அன்பு காட்டி எல்லாருடைய அபிமானத்தையும் கவர்ந்தவர்கள் ஏராளமான பேர் இருக்கிறார்கள். பார்க்கும் விதம் எல்லாவற்றையும் மாற்றிவிடுகிறது.

அதேபோலத்தான் பிரதமர் பதவியும், முதல்வர் பதவியும், அமைச்சர் பதவியும், எம்.எல்.ஏ. பதவியும், கலெக்டர் தாசில்தார் பதவியும், காவல்துறையினரின் பதவிகளும்.

எப்பொழுது நீங்கள் பதவியை ஒரு வாய்ப்பாகக் கருதுகிறீர்களோ அன்றே இலட்சியம் குடிகொள்ள, நீங்கள் சாதிக்க முடியாததை எல்லாம் சாதிக்கிறீர்கள். என்று நீங்கள் பிரதமராக அல்லது முதல்வராக இருந்துகொண்டு “என்னை குழிபறிக்க எண்ணுகிறார்கள்'' என்று கவலைப்படுகிறீர்களோ, அன்றே உங்கள் குறிக்கோள், நாட்டுப் பணி பின்னுக்குத் தள்ளப்படுகிறது. பதவியில் எப்படியாவது இருந்தாக வேண்டும் என்ற எண்ணம்தான் மேவுகிறது.

பதவிக்கு வருமுன் பார்த்த விதமும், பதவிக்கு வந்தபின் அவர்களது அணுகுமுறையையும் கவனியுங்கள். ஏன் அவர்கள் சாதிக்கவில்லை என்பது புரியும்.

**என் அனுபவம்**

என்னைத் தொழில் ஆலோசகராக அழைத்திருந்தார்கள். போனேன். அங்குள்ள தொழிற் சாலை மேலாளரை யாருக்கும் பிடிக்கவில்லை. அவரை சர்வாதிகாரி என்றார்கள். எந்த வேலையையும் "இதைச் செய்", "இப்படிச் செய்", "நாளை வா!" என்று சதா அதிகாரம் செய்கிறார் என்பதுதான் அவர்களது குறை.

நான் கூறினேன். "ஐயா!" உங்கள் தொழிலாளர்களிடம் பேச கொஞ்சம் நேரம் எடுத்துக் கொள்ளுங்கள். 'இதுதான் பிரச்சனை! என்ன செய்யலாம்?' என்று அவர்களிடம் யோசனை கேளுங்கள். இடையே 'இப்படி செய்யலாமே என்று நான் எண்ணுகிறேன்' என்றும் சொல்லுங்கள். 'நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?' என்று அவர்கள் அபிப்ராயத்தைக் கேட்கும்போது — 'தன்னையும் மதித்து யோசனை கேட்கிறார்' என்ற எண்ணம் அவர்களை உங்களுக்கு வாழ்நாள் முழுதும் விசுவாசத்துடன் நடக்க வைக்கும்" என்றேன்.

எனது மேற்பார்வையிலே இரண்டு மூன்றுநாள் தனது அணுகுமுறையை மாற்றி நடந்து கொண்டார்.

தொழிலாளர்களை அவர் கூலி ஆட்களாக முதலில் பார்த்தார். பிறகு புதிய அணுகுமுறையில் மனிதர்களாக பார்த்தார். அன்பு செலுத்தினார்.

பார்க்கும் விதத்தை மாற்றிக்கொண்டார். அவர் பதவியிலிருந்து ஓய்வு பெற்றபோது நான் போயிருந்தேன். அரை நாள், பரிசளிப்பும் பாராட்டும் நடந்தன. அவர் பிரிகிறாரே என்று மேடையிலே பலர் கண் கலங்கினார்கள்.

வள்ளுவர் சொல்கிறார் — ஒருவர் உங்களுக்குக் கெடுதல் செய்கிறார் என்றால் நாமும் கெடுதல் செய்யலாம். மறுபடி அவர் பதிலுக்கு இன்னும் அதிகமாகக் கெடுதல் செய்வார். இது முடிவில்லாமல் போகும். மாறாக அவருக்கு உதவுங்கள்; அன்பு காட்டுங்கள். அவரே வெட்கப்பட்டு உங்களிடம் திருந்திவிடுவார்.

தீங்கு செய்தாலும் பதிலுக்குத் தீங்கு செய்யாது, நன்மை செய்யுங்கள் என்கிறார் வள்ளுவர். பார்க்கும் விதம் மாறுபடுவதைக் கவனியுங்கள்.

**நல்லது நடக்க வேண்டும்!**

எல்லாவற்றிலுமே சரியான அணுகுமுறை இருக்கிறது. தவறான அணுகுமுறை இருக்கிறது. பார்க்கும் விதத்தை நாம் சரிப்படுத்திக் கொண்டோமானால் பிறகு எல்லாமே சரியாக நடக்கும்.

அதாவது நமது மனோபாவம் மாறும்போது — நல்லது நடக்க வேண்டும் என்று எண்ணும்போது — வெற்றி கிடைக்க வேண்டும் என்று எதிர்பார்க்கும் போது — எல்லாமே நல்லதாக நடக்கும்.

நல்லது நிகழ அடிப்படை மாற்றம் நிகழவேண்டிய இடம் நமது மனோபாவம்தான்.

"என்னால் முடியாது" என்றும் சொல்லலாம். மாறாக "என்ன செய்ய முடியும் என்று பார்க்கிறேன்" என்றும் சொல்லலாம். "பார்க்கிறேன்" என்று சொல்லும்போது உங்கள் மனோபாவம் மாறுகிறது. செய்வதற்கான வழிகளை மனம் கண்டுபிடிக்கிறது.

"நான் மட்டும் இந்த நிறுவனத்தின் தலைவனாக இருந்தால்..." என்று சொல்லலாம். அது உடனடியாக நடக்கக்கூடிய காரியமல்ல. நாளைக்கு

தலைவனாக ஆக "இன்று நான் கம்பெனிக்கு என்ன செய்ய முடியும்?" என்று சிந்தியுங்கள். செயல்படுங்கள். உங்கள் மேலதிகாரி உங்களை மெச்சுவார். உங்களைப் பாராட்டுவார். மேலதிகாரிகளிடம் உங்களைப் பற்றி சொல்வார். இருக்கிற நிலையில் என்ன செய்ய முடியுமோ அதைச் செய்யுங்கள்; குறைப்படுவதை விடுங்கள்.

**பெண்கள்**

அத்தைக்கு மீசை முளைத்தால்தானா ஆண் போல செயல்பட முடியும்? இன்று மீசை முளைக்காமலே — ஆண் வேடம் போடாமலே — எத்தனையோ பெண்கள் அசாதாரணமான சாதனைகளை நிகழ்த்தி வருகிறார்கள்.

"நான் இதைச் செய்ய வேண்டும். என் கடமை. என் பொறுப்பு" என்று குடும்பப் பணியை சுமையாக் காதீர்கள். "இது என் குடும்பம், இவர்கள் என் மக்கள். என் கணவன். இவர்கள் உயர நான் என்ன செய்ய முடியும்?" என்று மனோபாவத்தை மாற்றிப் பாருங்கள். வாழ்வதே ஆனந்தமாக இருக்கும். வீடே உங்களைக் கொண்டாடும். கடமை வேறு; நாமே அதை விரும்பிச் செய்வது வேறு. 'தண்டமே' என்று வேலை செய்வது வேறு. வீடு எவ்வளவு சுத்தமாக இருக்கிறது என்று எண்ணி பெருமைப்படுவது வேறு. "எதைப் பார்க்கிறோம்? எப்படிப் பார்க்கிறோம்?" என்பதுதான் வித்தியாசம். அதுதான் மனிதருக்கும் மனிதருக்கும் உள்ள மனோபாவ வித்தியாசம்.

அதுதான் நீங்கள் முன்பிருந்ததற்கும் இப்போதிருக்கும் நிலைக்கும் உள்ள வித்தியாசம்.

"அவர் என்னை கோபமூட்டுகிறார்" என்று மேலதிகாரி மீதோ கணவர் மீதோ பழியைப் போடலாம். மாறாக "என்னை யாரும் கோபமூட்ட முடியாது. எனது உணர்வுகளை கட்டுப்படுத்திக் கொள்ளத் தெரிந்த ஆள்தான் நான்" என்று நாம் நமக்கே கூற முடியும்; நடக்க முடியும்.

இங்கே, என்ன செய்தோம்? பிறர் மீது பழி போடுவதை விட்டுவிட்டு "நாம் என்ன செய்ய முடியும்? நம் கைக்குள் என்ன இருக்கிறது?" என்று பார்க்கும் விதத்தை மாற்றிக் கொண்டோம். அவ்வளவுதான்.

**விதியை மாற்ற முடியும் !**

"இந்த உலகில் எல்லாமே முன்னதாகவே விதிப்படி எழுதப்பட்டுவிட்டது. நான் என்ன செய்ய முடியும்?" என்றும் சொல்லலாம். மாறாக "நான் சுதந்திர மனிதன். என் விதியை என்னால் நிர்ணயிக்க முடியும்" என்றும் சொல்லிக் கொள்ளலாம்; செய்ய முயற்சிக்கலாம்.

பிறர் நம்மை ஆட்டி வைக்கலாம். "சந்தர்ப்ப சூழ்நிலை என்னை ஆட்டிப் படைக்கிறது" என்று முறையிடலாம். மாறாக "இதை எல்லாம் மீறும் துணிவு என்னிடம் இருக்கிறது" என்றும் கூறிக் கொள்ளலாம்.

நீங்கள் தொழில் தொடங்க விரும்புகிறீர்கள் — உங்கள் கிராமத்தில்.

நீங்கள் என்ன சொல்லலாம்? "நான் மட்டும் நகரத்தில் இருந்தால்....." என்று சொல்லலாம். மாறாக "கிராமத்தில் இருந்து கொண்டும் செய்ய முடியும். கிராமத்தில் இருந்து கொண்டு தொழில் செய்வதுதான்

வசதி. ஆட்கூலி கம்மி, வாடகை குறைவு. எல்லாரும் ஒத்துழைப்பார்கள்" என்றும் எண்ணலாம்.

அடுத்து என்ன சொல்கிறீர்கள்?

"வங்கிக்காரர்கள் மட்டும் கடன் கொடுத்தால்..." என்று சொல்கிறீர்கள்.

வங்கிப் பணம், அவர்கள் வீட்டுப் பணமல்ல. கடன் திரும்பி வரும் என்ற நம்பிக்கை இல்லாவிட்டால் கடன் தரமாட்டார்கள். அப்படி கடன் கொடுத்தாலும் நெருக்கடியான நேரத்தில் திருப்பி கேட்பார்கள்.

மாறாக, "என் வீடு வாசல் நிலம் நகை நட்டு இதிலிருந்து எவ்வளவு பணம் சேகரிக்க முடியும்?" என்று எண்ணலாம். "எனது நண்பர்கள் எவ்வளவு என்னை நம்பிக் கொடுப்பார்கள்" என்று ஆராயலாம். "நல்லது. ஒரு இரண்டு ஆண்டு வேலை பார்த்து கொஞ்சம் முதலீட்டுப் பணத்தை சேமிக்க முயல்வேன்" என்றும் நினைக்கலாம். "ஒரேயடியாக பெரிய தொழிலை தொடங்குமுன் சிறிய தொழிலை தொடங்கி கொஞ்சம் கொஞ்சமாக பெரிய தொழிலாக விரிவு செய்வேன்" என்றும் கூறிக் கொள்ளலாம்.

"எனக்கு என்ன தொழில் தெரியும்? ஒன்றும் தெரியாது. நான் என்ன செய்ய முடியும்?" என்றும் அங்கலாய்க்கலாம். மாறாக "காளான் வளர்க்கலாம், நல்ல ஆதாயம் வரும் என்று சொல்கிறார்கள். அதைப்பற்றி படிக்கலாம்; தெரிந்து கொள்ளலாம். செய்வது ரொம்ப சுலபம் என்கிறார்கள். அதைக் கவனிப்பேன்" என்று அதில் இறங்கலாம்.

"முடியும்" என்ற மனோபாவம் கொண்டவர்களால்தான் இன்றைய உலகம் உருவாகி இருக்கிறது. இதுவரை உங்களால் முடியாது என்பதற்கு காரணங்களை கண்டுபிடித்துக் கொண்டிருந்தீர்களானால், உடனே உங்கள் மனோபாவத்தை மாற்றிக் கொள்ளுங்கள். இன்று முதல் "என்னால் முடியும்" என்று எண்ணுங்கள். வெற்றி உங்களுக்கே!

## 15

# தம்பி! உண்மை நிலவரத்தை உணர்ந்துகொள்!

**மா**ணவர் மன்ற ஆண்டு ·விழா பக்கத்து ஊரில், ஓய்வு பெற்று கிராமத்துடன் வந்துவிட்ட ஒரு தத்துவப் பேராசிரியர் - அவரை அழைத்து வரலாம் என்று தீர்மானித்தார்கள். கல்லூரி மாணவர் மன்ற செயலர் போனார்.

அந்த தத்துவப் பேராசிரியர் குடியிருந்த வீட்டுக்கு சென்று கதவைத் தட்டினார்.

நடுவயதுள்ள ஒரு பெண்மணி கதவைத் திறந்தார். இந்த தத்துவ மேதை, நடுவயதில், மிக தாமதமாக திருமணம் செய்துகொண்டார் போலிருக்கிறது என்று போனவர் சமாதான மடைந்தார். "அவர் வீட்டில் இல்லையா? அவரைப் பார்க்கத்தான் வந்திருக்கிறோம்."

"வெளியே போயிருக்கிறார். இதோ வந்து விடுவார்!"

இதற்குள் அங்கே வயது வந்த பெண், ஒரு இளைஞர் என்று பலர் கூடிவிட்டார்கள். காரணம்,

கல்லூரி வேனில் மாணவர் மன்றத் தலைவர் சென்றிருந்தார்.

"என்ன செய்தி?" என்று அந்த அம்மாள் கேட்டார்.

"அவரைப்பற்றி நிறைய கேள்விப் பட்டிருக்கிறோம். அதுதான் பார்த்துப் போக வந்தோம்."

அந்த அம்மா முகத்திலே மகிழ்ச்சி; பிடிபடாத பெருமை, தன் கணவனைப் பற்றி.

"எங்கள் மன்ற ஆண்டு விழா. அதற்கு அவர்களை தலைமை தாங்க அழைக்க வந்தோம்."

"மிக்க மகிழ்ச்சி" என்றார் அந்த ஆம்மா.

வயது வந்த பெண் குறுக்கிட்டு, "அம்மா, அவர்கள் அப்பாவைப் பார்க்க வரவில்லை. வேறு யாரையோ தேடி வந்திருக்கிறார்கள்!" என்றார்.

மாணவர் மன்றச் செயலருக்கு சந்தேகம் வந்தது.

"இது பேராசிரியர் ஞானவேல் அவர்கள் வீடு தானே?"

மாணவர் மன்றச் செயலர் முகத்திலே அசடு வழிந்தது. ஒரு அரை மணி நேரம் தவறான வீட்டில் தொடர்பில்லாமல் பேசிக் கொண்டிருக்கிறோம் என்கிற வெட்கம் பிடுங்க வெளியேறினார்!

முதலிலேயே தெளிவாகக் கேட்டிருக்கலாம் - இது பேராசிரியர் வீடுதானே என்று. கேட்கவில்லை. பல விஷயங்களை, நாமாக, நம் விருப்பப்படி எண்ணிக் கொண்டு பேசுகிறோம். உண்மை நிலவரம் அறிந்து கொள்வதில்லை; அறிய முற்படுவதில்லை.

## நட்சத்திரப் போட்டி

ஒருநேரம் பத்திரிகை நிருபர் சினிமா நட்சத்திரம் செல்வஸ்ரீ வீட்டுக்குப் போனார். "செல்வஸ்ரீ இருக்கிறார்களா? பார்க்க வேண்டும்!"

ஒரு அழகான பெண் வெளியே வந்தார்.

"என்ன விஷயம்?"

"பத்திரிகைக்கு ஒரு பேட்டி!" இழுத்தார் நிபுணர்.

"இதோ பாருங்கள்! இந்தப் பத்திரிகை நிருபர்கள் விஷயம் எனக்குத் தெரியும். ஒன்று கேட்டுக் கொண்டு போவீர்கள். பின் உங்கள் விருப்பப்படி எழுதிவிடுவீர்கள். பேட்டி என்பீர்கள், கிசுகிசுவில் வரும். முழுவர்ணப்படம் வாங்கிப் போவீர்கள். பிறகு 'இது யாருடைய கட்டைவிரல்?' என்று கட்டைவிரல் மட்டும் போடுவீர்கள்" என்று சரமாரியாகக் கோபித்தார். அவரை சமாதானம் செய்து, பேட்டி எடுப்பதற்கும் நிருபருக்குப் போதும் போதும் என்றாயிற்று.

கடைசியில் பத்திரிகை அலுவலகத்திற்குப் போனால், அப்போதுதான் தெரிந்தது; நடிகை செல்வஸ்ரீ அவரல்ல, அவர் செல்வஸ்ரீ வீட்டு வேலைக் காரி என்கிற செய்தி! வேலைக்காரியும் வேலைக்காரிப் பாத்திரத்தில் நடித்திருக்கிறார்!

நாம் உண்மை நிலவரத்தை அறிய முற்படுவதில்லை. நடிகைக்குப் பதில் வேலைக்காரி யிடம் மனதைப் பறிகொடுத்து விடுகிறோம். அதாவது அவசரப்படுகிறோம்! முழுமையாக விசாரிப்பதில்லை. உண்மை நிலவரம் அறிய நேரம் எடுத்துக்

கொள்வதில்லை. நமது விவேகம் என்ற கண்களை வேகம் மறைக்கிறது.

'விவரமாகக் கேட்டால் நம்மை முட்டாள் என்று நினைத்து விடுவார்களோ?' என்கிற பயம் நம்மை ஆட்கொள்கிறது. பள்ளியில், கல்லூரியில், அல்லது கூட்டத்தில் ஒரு கேள்வி கேட்க நமக்குப் பயம். பிறர் என்ன சொல்வார்களோ என்ற அச்சம்.

முடிவில் கேள்வி கேட்காமல் நமது சந்தேகங்களுடனே வீடு போய்ச் சேருவோம்.

**மதிப்புக் குறைவு**

இடம் சென்டிரல் ரெயில் நிலையம். கோவை செல்ல வேண்டும். நண்பருடன் போய்க் கொண்டிருந்தேன். பேசிக்கொண்டே நடந்தோம். ரெயிலில் ஏறி உட்கார்ந்ததும் இது சரியான ரெயில்தானா என்று சந்தேகம் வந்தது. நண்பரைக் கேட்டேன். "பயப்படாதீர்கள். பிளாட்பாரம் 5 என்று போட்டிருக்கிறார்கள். வேறு எங்காவது 5-வது பிளாட்பாரம் இருக்கிறதா பாருங்கள்!" என்றார். நான் அமைதி அடைந்தேன்.

வண்டியில் திமுதிமுவென்று நிறைய வட இந்தியர்கள் முண்டாசு கோட்டுடன் ஏறினார்கள். விசாரித்ததில் நாங்கள் டெல்லி செல்லும் வண்டியில் ஏறி இருப்பது புரிந்தது.

சில ஆண்டுக்கு முன் இது நடந்தது. இன்னும் என்னால் மறக்க முடியவில்லை. முதலிலேயே கேட்டிருக்கலாம். கேட்பது 'மதிப்புக் குறைவு' என்றிருந்தோம்.

வாழ்க்கை எங்கே போகிறது என்று உணராமல் "ஏதோ போய்க்கொண்டிருக்கிறது" என்று

பயணம் செய்கிறார்கள் பலர். சரியான திசையில் சென்றால்தான் நாம் நமது ஊருக்குப் போய்ச் சேர முடியும்.

செல்லும் திசை பற்றி பலர் அக்கறைப் படுவதில்லை. தெரிந்துகொள்வதில்லை. இதனால் சரியான இலக்கை அடைய முடிவதில்லை.

## முன்னேற முடியும்!

வேலை தேடிப் போகிறீர்கள். நீங்கள் கேட்கின்ற இடத்தில் வேலை காலி இல்லாமல் இருக்கலாம்; நஷ்டத்தில் ஓடி இழுத்து மூடுகின்ற நிலையில் இருக்கலாம்; அந்த உண்மை நிலவரம் அறியாமல் அங்கே போய் "வேலை ... வேலை ..." என்று கேட்பதிலோ, சிபாரிசுகளைக் கொண்டு செல்வதிலோ எந்த அர்த்தமுமில்லை.

நீங்கள் தொடங்குகின்ற தொழிலில் தயார் செய்யப்படும் பொருட்களுக்கு தேவையே இல்லாமல் இருக்கலாம். சிமெண்டுக்கும் சுண்ணாம்பிற்கும், சர்க்கரைக்கும் நெல்லுக்கும் பிளாஸ்டிக் பை வந்தவுடன் சணலில் செய்யப்பட்ட கோணிப்பைக்கு மார்க்கெட் போய்விட்டது. அமெரிக்காவில் வேகமாக செல்லக்கூடிய விமானம் வந்தவுடன் ரெயில் பயணம் படுத்து விட்டது. கிராமத்துக்குக் கிராமம் பேருந்து ஏற்பட்டதன் விளைவாக மயிலாடுதுறையிலிருந்து தரங்கம்பாடி செல்லும் ரெயிலில் பயணிகள் ஏறவில்லை. நஷ்டத்தில் ஓடிக்கொண்டிருந்த அந்த பக்கத்து ரெயிலையே நிறுத்தி விட்டார்கள்.

நாம் செய்யும் தொழில் நுட்பத்தைவிட புதிய தொழில் நுட்பம் அமெரிக்காவிலிருந்தோ ஜப்பானி

லிருந்தோ வந்திருக்கலாம். அது விலை மலிவாகவும், நவீனமானதாகவும் இருக்கலாம். இதையெல்லாம் தெரிந்து கொண்டால்தான் நாம் முன்னேற முடியும்.

எதில் இறங்கினாலும் சரி அதைப்பற்றிய உண்மைகளை விவரங்களை முழுமையாகத் தெரிந்து கொண்டீர்களா? அல்லது அரை குறையாகத் தெரிந்துகொண்டு ஆழம் தெரியாமல் காலை விடுகிறீர்களா?

மேற்படிப்பு என்ன படிக்கலாம் என்பதி லிருந்து என்ன தொழிலில் இறங்கலாம் என்பது வரை இன்று அது பற்றிய பல்வேறு விஷயங்களையும் தெரிந்து கொள்ள, ஏராளமான தகவல் நிலையங்கள் இருக்கின்றன. நிறைய ஆலோசகர்கள், அனுபவமுள்ள மனிதர்கள் இருக்கிறார்கள்.

## அனுபவம்

சிலநேரம் உண்மை நிலவரம் நமக்குப் பிடிக்காமல் இருக்கலாம். ஆகவே, அதைக் கணக்கில் எடுத்துக் கொள்ள மாட்டோம்; உண்மையை ஒதுக்கி விடுவோம். அதனால் துன்பப்படுவோம்.

ஒருவர் ஒரு நாளிதழின் ஆசிரியர் பதவிக்கு விண்ணப்பம் செய்தார். தான் சிறந்த எழுத்தாளர் என்று தன் கதைப் புத்தகங்களை ஆதாரமாக அனுப்பினார். அவர்கள் கேட்டதெல்லாம் பத்திரிகைத் துறையிலே நிருபராகவோ, உதவி ஆசிரியராகவோ பணி ஆற்றிய அனுபவம் உண்டா என்பதுதான். அந்தத் துறையில் முன் அனுபவம் - அதுதான் அவர்களுக்குத் தேவை. எழுத்தாளர் சொன்னார் "என்னால் அந்த வேலையைச் செய்ய

முடியும். எனக்குத் திறமை இருக்கிறது" என்று. ஆனால், எழுத்தாளரை அவர்கள் தேர்ந்தெடுக்கவில்லை.

உங்களால் என்ன செய்ய முடியும் என்பதை எண்ணி யாரும் தேர்வு செய்வதில்லை. நீங்கள் இதுவரை என்ன செய்திருக்கிறீர்கள் என்ற பட்டியலைப் பார்த்துத்தான் உங்கள் தகுதியைத் தீர்மானிக்கிறார்கள்.

என் நண்பர் ஒருவர் நல்ல நிறுவனத்தில் பெரிய வேலை பார்த்துக் கொண்டிருந்தார். அதை விட்டு விட்டு தொழில் தொடங்க விரும்பினார். நண்பர்கள் பலரும் பல இலட்சம் முதலீடு செய்வதாகச் சொன்னார்கள். நண்பர் வேலையை விட்டு விலகினார். முதலீடுக்கான பணம் வசூல் செய்யப் போனபோதுதான் அவருக்குப் புரிந்தது வேலையிலிருக்கும்போது கிடைக்கும் வரவேற்பு வேலையில் இல்லாதபோது கிடைப்பதில்லை என்ற பேருண்மை. நண்பர்கள் சாக்குப் போக்கு சொன்னார்கள். அவர் நினைத்ததில் நாலில் ஒரு பங்கு பணம்கூடத் திரட்ட முடியவில்லை.

பல நேரம் பல விஷயங்களையும் நாம் லேசாக எடுத்துக் கொள்கிறோம். நாம் பார்க்கும் விதமும், உலக நடைமுறையும் வேறு வேறாக இருக்கின்றன. இதனால் துன்பப்படுகிறோம். ஒரு அறிஞன் சொன்னான் "முட்டாள்கள் அனுபவம் என்கின்ற பள்ளிக்கூடத்தில் தான் கற்றுக் கொள்கிறார்கள்" என்று. எனவே, அன்றாட வாழ்வில் உண்மை நிலவரம் எப்படி இருக்கிறது என்று நாம் தெரிந்து கொள்ள வேண்டும்.

இப்போது தம்பீ! உன்னைப்பற்றிய உண்மை நிலவரத்தைக் கூறுகிறேன். தெரிந்துகொள்.

நீ ஏதோ தனி ஆளல்ல. இந்த பிரபஞ்சத்துடன் தொடர்பு கொண்டவன். நீ ஏதோ தற்செயலாகப் பிறந்தவனல்ல. ஒரு பணிக்காக - அறிவும் அனுபவமும் பெற்று பரிணாம வளர்ச்சியில் மேலே ஏறுவதற்காகத் தான் படைக்கப்பட்டிருக்கிறாய். "என்ன செய்வேன்?" என்று நீ துன்பப்பட வேண்டியதில்லை. உனக்கு உதவுவதற்காக ஒரு மாபெரும் ஆற்றல் காத்திருக்கிறது. அதனுடன் தொடர்பு கொள்.

உலகில் வாழும் பலரும் ஏதோ பிறந்தோம், சாகிறோம் என்று வாழ்கிறார்கள். அவர்கள் தங்களைப் பற்றிய உண்மை நிலையை உணர்வதில்லை. நீயோ, உன்னைப் பற்றிய உண்மை நிலவரத்தை, உணர்ந்துகொள். நீ சாதிப்பாய்!

# 16

## மகளே! கம்பீரமாக நில்!!

நடைமுறை உலகில், எப்படி நடந்து கொள்வது என்பது பற்றி சில நுணுக்கங்கள் இருக்கின்றன. அவற்றை நாம் தெரிந்து கொள்வது நல்லது.

தோல்வி என்பது ஒரு விஷயத்தை மீண்டும் பரிசீலனை செய்ய ஒரு வாய்ப்பு. எங்கோ தவறி இருக்கிறோம் என்பதைப் புலப்படுத்தும் நமக்குத் தெளிவுபடுத்தும் ஒரு நிகழ்ச்சி. அதை ஒரு பாடமாக எடுத்துக்கொள்ள வேண்டும். பல நேரம் நாம் செல்லும் திசையைத் திருப்புவதற்காக அத்தகைய தோல்விகள் ஏற்படுவதுண்டு.

### தோல்வியில் நன்மை

ஒரு இளைஞர் வந்தார். ஒரு பெண்ணைக் குறிப்பிட்டு அவளுடன் தான் பழகி வருவதாகவும் அந்தப் பெண்ணுக்கும் தன்னை பிடித்திருப்பதாகவும் சொன்னார். காதல் திருமணங்கள் நல்லவைதான். திருமண வாழ்வு என்பது, ஒத்த உள்ளத்துடன், ஒருவருக்கொருவர் விட்டுக்கொடுத்து, ஒருவர்

மற்றவருக்காக வாழும் உயர் வாழ்வு; உயர் பண்பு; உயர் நட்பு.

அந்தப்பெண் வேறு மதம்; மாறுபட்ட பழக்க வழக்கங்கள் கொண்ட குடும்பம். இளைஞர் படித்தவர். எனவே, பெண்ணின் படிப்பைப் பற்றிக் கேட்டேன். "படிக்காத பெண்" என்றார். எவ்வளவு நாள் தெரியும் என்றேன். "மூன்று மாதமாக" என்றார். அந்தப் பெண்ணைத் திருமணம் செய்து கொள்ள விரும்புவதாகவும் நான் திருமணத்திற்கு வந்து வாழ்த்த வேண்டுமெனவும் கேட்டுக் கொண்டார்.

வேறு வேறு பழக்கங்களையும் பண்பாடு களையும் கொண்ட மனிதர்கள் சேர்ந்து வாழ்வது என்றால், அதிக பொறுமையும், சகிப்புத் தன்மையும் வேண்டும். அத்துடன் திருமணம் செய்துகொள்ளப் போகிறவர்களின் குணங்களைப் பற்றி இருவரும் நன்கு தெரிந்துகொள்ள வேண்டும். காதலின் உந்துதல் - உடலுறவின் வேகம் - அதிகமாயிருக்கும்போது மற்றவரது குணங்களைப் பற்றி கவனிக்க மாட்டோம். அது முடிந்து, அன்றாட வாழ்வு வாழும் போதுதான் மற்றவர்களது பழக்க வழக்கங்கள் பெரிய பிரச்சினையாகத் தலைதூக்கும்.

"இன்னும் கொஞ்சநாள் பழகுங்கள். ஒருவரை ஒருவர் நன்கு அறிந்துகொள்ளுங்கள். அதன்பின் திருமணம் செய்துகொள்ளுங்கள்" என்று நான் யோசனை சொன்னேன். ஆனால், சில வாரங்களில் அந்தப் பெண் அந்த இளைஞரை விட்டு விட்டுப் போய்விட்டாள்!

இளைஞருக்கு காதலில் தோல்வி! மனமுடைந்து போனார். அதையே எண்ணிப் புலம்பிக்

கொண்டிருந்தார் சில வாரம். பிறகு அந்த உண்மையை ஏற்றுக் கொண்டார்.

வாழ்வில் நமக்கு வழி காட்டவே சோதனைகளும் தோல்விகளும் வருகின்றன. சரியான திசையில் செல்லாத போது அவை வழி காட்டுகின்றன. அப்போது, அந்த நேரத்தில் நமக்கு அது தோல்வியின் உண்மை புரிவதில்லை. வருந்துகிறோம். கலங்குகிறோம்!

### வேலை போயிற்று! – நன்மைக்கு

என் நண்பர் பேராசிரியர் பரஞ்சோதி சொன்னார்–

"ஒரு நிறுவனத்தில் வேலை பார்த்துக் கொண்டிருந்தேன். உற்சாகமில்லாத வாழ்க்கை. 'தெண்டமே' என்று வேலைக்குப் போய் வருவேன். ஒருநாள் என்னை வேலையிலிருந்து நீக்கினார்கள். எனக்கும் உள்ளூர இந்த வேலையிலிருந்து விடுபட வேண்டும் என்பதுதான் விருப்பம். எனினும் வேலை போய்விட்டதால் குடும்பம் நடத்துவது கஷ்டமாகி விட்டது. கவலைப்பட்டேன். பயம் பிடித்துக் கொண்டது.

மூன்று மாதம் வேலையில்லாமல் அலைந்து ஏறி இறங்கிய பிறகு, ஒரு வேலை பாதி சம்பளத்தில் கிடைத்தது. இருந்தாலும் நல்ல வேலை. பிடித்த வேலை. ஏற்றுக்கொண்டேன். இது என் வாழ்க்கையிலே மிகப்பெரிய திருப்பம். பின்னால் நான் வாழ்க்கையில் முன்னேற வழிகோலியது. அவர்கள் வேலையைவிட்டு என்னை வீட்டுக்கு அனுப்பியிரா விட்டால், நான் அதிலேயே உட்கார்ந்திருப்பேன். 'இது

நல்லதுக்குத்தான் ஏற்பட்டது' என்பதைப் புரிந்து கொள்ளவே இரண்டு ஆண்டு ஆயிற்று."

வாழ்வில் ஏற்படும் தோல்விகள் நம்மை திசை திருப்புகின்றன. நம்மை சிந்திக்க வைக்கின்றன. தோல்விகளைப் புரிந்து கொள்ளும்போது - ஏற்றுக் கொண்டு செயல்படும் போது - ஒரு புதிய உலகம் நம்மை வரவேற்கிறது.

## தோல்வியைத் தோண்டாதே! திசை திரும்பு

அமெரிக்காவில் நாங்கள் இருந்த ஊருக்கு அருகில் - பதினைந்து மைலில் - ஒரு கிராமம் இருந்தது. அங்கே வயல் முழுவதும் எண்ணெய்க் கிணறுகள். அதிலிருந்து எண்ணெய் எடுத்துக் கொண்டிருந்தார்கள். அதன் சொந்தக்காரனை நான் சந்தித்து "எப்படி இவ்வளவு பெரிய பணக்காரன் ஆனாய்? இவ்வளவு பெரிய எண்ணெய் வயலை உண்டுபண்ணினாய்?" என்று கேட்டேன்.

வால்டர் சொன்னார் - "ஐயா! நீங்கள் இருக்கும் ஊரில்தான் நானும் குடி இருந்தேன். எண்ணெய்க் கிணறு தோண்டுவதுதான் என் தொழில். ஓரிடத்தில் நிபுணர்கள் எண்ணெய் கிடைக்கும் என்றார்கள். நிலத்தை வாங்கினேன். தோண்டினேன். இரண்டாயிரம் அடியில் எண்ணெய் கிடைக்கவில்லை. 'எண்ணெய் கொஞ்சம் ஆழத்தில் இருக்கிறது. இன்னும் கொஞ்சம் ஆழமாகத் தோண்டுங்கள் என்றார், நிபுணர். இரண்டாயிரம், மூவாயிரம் என்று ப்த்தாயிரம்' அடி வரை போனோம். எண்ணெய் ஏதும் கிடைக்கவில்லை; காசுதான் போயிற்று.

யோசனை செய்தேன்.

"இங்கில்லாவிட்டால் சரி விடு. வேறிடத்தில் தோண்டு" என்று தோண்டியிருந்தேனானால், ஐந்து புதிய இடங்களில் தோண்டி இருப்பேன். ஏதாவது ஓரிடத்தில் எண்ணெய் கிடைத்திருக்கும். இருப்பதையே வைத்துக்கொண்டு அதிலேயே ஈடுபட்டு தோல்வியை மேலும் மேலும் சரிப்படுத்த முயல்வது முட்டாள்தனம் என்று கண்டுகொண்டேன்.

இந்த ஊருக்கு வந்து, புதிய இடத்தில் தோண்டினேன்; எண்ணெய் கிடைத்தது!" என்றார்.

தோல்வியை சரிப்படுத்த முயல்வதைவிட வேறு திசையில் அணுகுவது நல்லது.

"வெற்றி என்பது எப்போது நிலையாக இருக்கும்?" என்று கேட்டுவிட்டு தத்துவஞானி ஜேம்ஸ் ஆலன் பதில் கூறுகிறார்.

வெற்றியடைந்ததும், "வெற்றி பெற்று விட்டோம் இனி கவலைப்பட வேண்டியதில்லை. எல்லாம் தானே ஓடும்!" என்ற இறுமாப்பு வராமல் சதாசர்வ நேரமும் 'அடுத்து என்ன செய்யலாம்?' என்று கவனமுடன் கண்காணித்துக் கொண்டிருக்க வேண்டும். அப்போதுதான் வெற்றியைத் தக்க வைத்துக் கொள்ள முடியும். இல்லாவிடில் வீழ்ச்சியின் வித்து அங்கே முளைவிடுகிறது" என்கிறார்.

வெற்றி என்பது ஒரு மன நிலை. முன் எச்சரிக்கையாக இருக்க வேண்டிய மனநிலை. கர்வமும், தற்பெருமையும் கொண்டவர்கள் பொது வாழ்வில் எப்படி மக்கள் அபிமானத்தை இழக்கிறார்கள் என்பதை நாம் திரும்பத் திரும்பப் பார்க்கிறோம்.

## சார்ந்து நிற்காதீர்கள் - வயோதிகம் தோல்வியல்ல

நமக்கு இரண்டு கால்கள் இருக்கின்றன. நாம் நேரே நிற்கலாம். ஏன் சுவர் மீது தேவை இல்லாமல் சார்ந்து நிற்க வேண்டும்? சாய்ந்து நிற்கும்போது நமக்கு என்ன நேரிடுகிறது? நமது நேரான கம்பீரமான தோற்றம் பாழ்பட்டு விடுகிறது.

குழந்தை அம்மாவைத் தான் சார்ந்து நிற்கிறது. வளரும் வரை. ஆனால் நாம் வளர்ந்தவர்கள். இனியும் குழந்தை அல்ல.

திருமண வீட்டிற்கு வாழ்த்துக் கூற மூத்த நண்பர் ஒருவர் வந்திருந்தார். வயது 78. எனவே மேடை மீது அழைத்துச் செல்ல நான் அவர் கையைத் தாங்கிப் பிடித்துக்கொண்டு நடந்தேன். அவர் என் கையை உதறித் தள்ளினார். "என்னால் தனியே நடக்க முடியும்!" என்றார். அவரது சார்ந்து நிற்க விரும்பாத குணத்திற்கு தலைவணங்கினேன். வயோதிக காலத்திலும் உதவியை நாட விரும்பாத உள்ளம்! எப்பேர்ப்பட்ட உள்ளம்!

## ஊனம் தோல்வியல்ல !

சமீபத்தில் பார்வையிழந்த ஒரு பெண்ணைப் பற்றிய செய்தியைப் படித்தேன். அந்தப்பெண் தனக்குப் பார்வை இல்லை என்பதை ஒரு குறையாகவே கருதவில்லை. இயல்பாக எல்லோரையும் போல் நடந்து கொள்கிறாள். பல்கலைக்கழகத்தில் படிக்கிறாள். அப்படி இருக்கும்போது நீங்கள் ஏன் அவருக்காகப் பரிதாபப்பட்டு அவரது ஊனத்தை அவருக்கு சதா நினைவுபடுத்திக் கொண்டிருக்க வேண்டும்? சார்ந்து நிற்க அவர் விரும்பவில்லை. மன ஊனம் அவருக்கில்லை. எப்போதும் எதற்கும் நாம்

பிறரை சார்ந்து நின்றோமானால் நாம் நம் தனித் தன்மையையும் கம்பீரத்தையும் இழந்துவிடுவோம்.

ஒரு துன்பம் வந்த நேரத்தில் யாராவது நண்பர்களிடம் சென்று மனச்சுமையை இறக்கி வைக்க முயன்றோமானால், அவர்கள் கேட்பதை எல்லாம் கேட்டுவிட்டு, பிறகு நம்மையே குற்றம் சாட்டுவார்கள். கேவலப்படுத்துவார்கள்.

நாம் அனுதாபத்திற்காக செல்கிறோம்.

கிடைப்பதோ கேவலம், இழிவு, குற்றச்சாட்டு, கண்டனம்.

இது ஏற்பட்டக் காரணம் நமது சார்ந்து நிற்கிற குணத்தினால்தான். நாம் நன்றாக உணர்ந்துகொள்ள வேண்டும். உதவ முன் வருபவர்களது உதவியைப் பெற்றுக்கொள்வது வேறு; மாறாக அவர்களை சார்ந்து நிற்பது வேறு.

நாம் மிடுக்கான மனிதர்கள். அந்த மிடுக்குடன் வாழ்நாள் முழுக்க உலாவுவோமாக!

17

## துவண்டுவிடாதே, தம்பி!

**நா**ராயணன் பி.காம் படித்த இளைஞர். ஒரு நல்ல வேலை கிடைத்தது. மூன்றாண்டுகள் வேலை பார்த்தார். மகிழ்வுடன் இருந்தார். பல விஷயங்களைக் கற்றுக்கொண்டார். அவரது நிறுவனம் நஷ்டத்தில் ஓடிக்கொண்டிருந்தது, அவருக்குத் தெரியும். எனினும் அவரை வேலையிலிருந்து நீக்கியபோது அவருக்கு பேரதிர்ச்சியாக இருந்தது.

மனைவி, குழந்தை இருக்கிறார்கள். வேலை போனதை மனைவியிடம் சொல்ல முடியவில்லை; சொல்லாமலும் இருக்க முடியவில்லை. செறுமினார். ஊர் உலகம் முழுவதுமே அவரை "உதவாக்கரை ... உபயோகமற்றவன்" என்று சொன்னாற்போல ஒரு நினைப்பு. யாரையும் பார்க்கப் பிடிக்கவில்லை. அவமானமாக இருந்தது.

### நம்பிக்கை தேவை

இது உண்மையில் நடந்த நிகழ்ச்சி. அதாவது நாராயணனால் தோல்வியை சமாளிக்க முடியவில்லை. காரணம், இந்தத் தோல்வி அவருக்குப்

புது அனுபவம்; முதல் அனுபவம். தோல்வியை சமாளிப்பது எப்படி என்பதை அறியாதவராாக வளர்ந்துவிட்டார், நாராயணன்.

இப்படிப்பட்ட நிலை பலருக்கும் ஏற்படுகிறது. ஒரு பத்திரிகை அலுவலகத்திலிருந்து அந்த ஆசிரியரை வீட்டுக்கு அனுப்புகிறார்கள் என்று வைத்துக் கொள்ளுங்கள். உலகின் மதிப்பிலிருந்தே தான் தாழ்ந்து விட்டதாக அவர் எண்ணுகிறார். உலகமே அவரை ஒதுக்கி, "அவருக்கு திறமை போதாது" என்று முத்திரை குத்திவிட்டதாக வருந்துகிறார்.

**பெண்ணால் சமாளிக்க முடியும்**

வாழ்வில் தோல்வி வரும் என்பதையும் தோல்வியை நம்மால் சமாளிக்க முடியும் என்ற நம்பிக்கையும் நாம் பெற வேண்டும். சொல்லப் போனால் தோல்வி நல்ல அனுபவம். "அதையும் பார்த்துவிட்டேன். அதையும் சந்தித்து நான் வாழ்ந்து கொண்டிருக்கிறேன்!" என்று நமக்கு நாமே சொல்லிக் கொள்ள வேண்டும்.

ஒரு பெண்ணுடன் பத்தாண்டு குடும்பம் நடத்தியபின், கணவன் அவளை ஒதுக்கிவிட்டான். கணவன் ஒதுக்கிய உண்மைக் காரணம் அவனுக்கு வேறொரு பெண்ணின் மீது ஏற்பட்ட புதிய காதல். அவனோ "அவள் நடத்தை கெட்டவள் - அதுதான் ஒதுக்கி விட்டேன்!" என்று பச்சைப் பொய்யைச் சொல்கிறான்.

அந்தப் பெண்ணின் மன நிலையை ஒரு கணம் கற்பனை செய்து பாருங்கள். அவளுக்கு உலகமே இடிந்து விழுந்தது போலிருக்கிறது. இப்படிப்பட்ட

'தோல்வி'யை இதுவரை அவள் கற்பனை கூட செய்து பார்த்ததில்லை.

ஒரு பெண் எங்கே போவாள்?

நமது சமுதாயத்தில் எங்கே போக முடியும்?

வைரம் என்ற அந்த பெண் என்ன செய்தாள்? பெண்களுக்கு நடத்தப்படும் அனாதை விடுதி பற்றி அவள் கேள்விப்பட்டிருக்கிறாள். அங்கே போனாள். ஒரு வேலை கிடைத்தது. முதலில் தன் சாப்பாட்டைக் காப்பாற்றிக் கொண்டாள். அவளுக்கு நன்றாக படிப்பு வரும். அனாதை ஆசிரமத்தில் படித்தாள். அவள் மனதிலே ஒரு வெறி. எத்தனை பெண்கள் இப்படி அனாதையாகப் புகலிடமின்றி, ஆதரவின்றி இந்த சமூகத்திலே இருக்கிறார்கள் என்ற எண்ணம் ஏற்பட்டது, அங்கு வந்து சேர்ந்த பெண்களைப் பார்த்தபோது. அவர்களுக்காக சட்டப்படிப்பு படித்தாள். வழக்கறிஞர் ஆனாள். இன்று அந்த வைரம் திருச்சி அருகே வழக்கறிஞராக, ஆதரவற்ற பெண்களுக்காகவே வாழ்கிறார். தோல்வியை சமாளிப்பதிலேதான் வெற்றி காண முடியும்.

**தோல்வியை தோல்வியாக எடுத்துக்கொள்ள வேண்டியதில்லை !**

இள உள்ளங்களில் - அனுபவமில்லாத வயதில் - தோல்வி பெரிய பாதிப்பை - மன பாதிப்பை ஏற்படுத்தி விடுகிறது. கன்னத்தில் கை வைத்தபடி உட்கார்ந்து விடுகிறார்கள். இது சரியல்ல; தேவையல்ல.

தோல்வி வரும்போது அதன் விளைவுகளை யோசியுங்கள். மீண்டு வரும் வழிகளை யோசியுங்கள். நம்மால் நிச்சயம் மீண்டு வரமுடியும். அதனால்தான்

“கப்பல் கவிழ்ந்தாலும் கன்னத்தில் கை வைக்காதே” என்றார்கள்.

சாமிவேலுவைப் பார்த்து “இவனுக்கு மக்களிடம் பழகத் தெரியவில்லை. இவன் ஒருநாளும் விற்பனையாளனாக ஆக முடியாது. இவனிடம் பைசாவுக்கு யாரும் பொருளை வாங்க மாட்டார்கள்” என்றார் அவனுடைய மேலதிகாரி. சாமிவேலுக்கு அதுதான் முதல் வேலை. குடும்பம் அதை நம்பித்தான் வாழ்ந்தது. வேலை போனதும் இடிந்து போனான் - ஒரு சில நாட்கள். யோசித்தான். “உண்மைதான், அவனால் எல்லாருடனும் பழக இயல்பாகப் பேச முடியவில்லை. இந்த வேலை பொருத்தமானது அல்ல” என்று உணர்ந்தான். அவனுக்கு படம் போடத் தெரியும். மக்களை வேடிக்கையாக பார்க்கத் தெரியும். கேலிப்படம் வரைந்தான். அந்தப் படங்களைப் பார்த்தவர்கள் சிரித்தார்கள், சிந்தித்தார்கள். சாமிவேலு புகழ் பெற்ற கேலிப்படக்காரனாக ஆனான்.

குறைகளை - தோல்விகளை ஏற்றுக் கொள்ளுங்கள். எல்லாருமே சகலகலா வல்லவர்கள் அல்ல. ஒரு வழி மூடிவிட்டது என்றால், உலகமே மூடிவிட்டது என்று அர்த்தமல்ல. ஆயிரம் வழிகள் இருக்கின்றன. அவற்றில் உங்களுக்கு ஒரு புதிய வழியைத் தேர்ந்தெடுங்கள்.

தோல்வி என்பது சுயசோதனை செய்து கொள்ள ஒரு நல்ல தருணம் - நம்மைப் பற்றிய உண்மையை தெரிந்துகொள்ள வாய்ப்பு. நமது ஆசைகளின் பின்னால் நாம் போகிறோமா அல்லது நமது ஆற்றலை அறிந்து நடக்கிறோமா என்பதை நாம் புரிந்து கொள்ள வேண்டும்.

## தோல்வியின் நடனம் வென்றதா ?

தோல்வி நமது குறையினால் ஏற்பட்ட தென்றால் ஏற்றுக்கொள்ள வேண்டும். எந்த நிமிடம் நாம் நம் தோல்விகளை - குறைகளை - மனதார ஏற்றுக்கொண்டு வேறு வழி தேடுகிறோமோ அப்போது பல வழிகளை நம் மனம் காட்டுகிறது.

கலாவுக்கு பெரிய நடனக்காரியாக ஆக வேண்டுமென்று ஆசை. 12 ஆண்டுகள் நடனம் கற்றுக் கொண்டாள். அரங்கேற்றம் செய்தாள். திரைப் படங்களில் நடனமாடினால் புகழ் பெறலாம் என்றார்கள். திரைப்பட நடன அமைப்பாளர் முன் ஆடிக் காட்டினாள். “நீ ஒருநாளும் பெரிய நடனக் காரியாக ஆகப்போவதில்லை!” என்றார் அவர். “உனக்கு உடல் வாகு இல்லை” என்று காரணமும் சொன்னார்.

கலாவின் எதிர்காலக் கற்பனைகள் ஒரு நிமிடத்தில் தவிடு பொடியாயின. அதிலிருந்து மீண்டு வர அவளுக்கு ஒருவார காலமாயிற்று. பிறகு யோசித்தாள். புது வழி கண்டாள். இன்று கலா நடனமாடவில்லை; சென்னையில் நடனப் பள்ளி நடத்துகிறார்! அவருடைய மாணவிகள் சிறப்பான நடன மணிகளாக விளங்குகிறார்கள்.

## பொருள் வெற்றியே வெற்றியல்ல !

சமுதாயம் வெற்றி பெற்றவர்களைத்தான் பாராட்டுகிறது. ஆனால், வெற்றி பெற்றவர்கள் பல தோல்விகளைக் கண்டவர்கள்தான் என்பதை இந்த உலகம் உணர்வதில்லை.

ஒரு புகழ் பெற்ற மருத்துவர் இருந்தார். மிகச் சிறந்தவர், தொழிலில். இன்ன நோய் என்று உடனே

கண்டுபிடித்து விடுவார். மக்கள் கூட்டம் கூட்டமாக அவரைப் பார்க்க வந்து கொண்டிருந்தனர். அவர் உழைத்தார், உதவினார், பணம் சேர்த்தார்.

வீட்டிலே அவர் மனைவியுடன் பேச அவருக்கு நேரமில்லை. குழந்தை குட்டிகளுடன் பழக பாடம் சொல்லிக் கொடுக்க - ஒரு கோயில் குளத்திற்கு அழைத்துப் போக - நேரமில்லை. வீட்டிலே பிள்ளைகள் தான்தோன்றியாக வளர்ந்தார்கள். மனைவியிடம் மனக்கசப்பு தான் மிஞ்சியது. மனைவி பெற்றோர் வீட்டிலும், மகளிர் சங்கத்திலும் பெரும் பொழுதைக் கழித்தார். மருத்துவர் தொழிலில் வெற்றி பெற்றார், உண்மை. ஆனால், குடும்ப வாழ்க்கையில் தோற்றுப்போனார்! ஆனாலும், இது வெளியில் தெரிவதில்லை.

வெற்றியே எல்லாமல்ல. வெற்றியுடன் பிற அம்சங்களும், பிற தேவைகளும் நிறைவேறும் போதுதான் வாழ்க்கை நிறைவு பெறும்.

வாழ்க்கை என்பது ஒரு வாய்ப்பு. அதை முழுமையாகத் தெரிந்து கொள்ளுங்கள்; அனுபவியுங்கள்; அதிலேதான் உண்மையான வெற்றி இருக்கிறது

# 18

# தம்பி! இதோ தோல்வியை வெற்றியாக்கும் தந்திரம்!

**வெ**ற்றியின் விலை அதிகம். வெற்றி பெற்றவர்களை உலகம் அண்ணாந்து பார்க்கிறது. அவர்களை ‘மேதைகள்’ என்று உலகம் கொண்டாடு கிறது. அவர்களின் அறிவுரைகளை, முத்துக்களாக பொறுக்கிக் கொள்ள காத்திருக்கிறது.

வெற்றி பெற்ற அந்த மனிதனிடம் உலகம் பெரிய எதிர்பார்ப்பை ஏற்படுத்துகிறது. அவனது எல்லா செயல்களையுமே கூர்ந்து கவனிக்கிறது. எப்போதுமே, அவன், முன்பு செய்ததைப்போல, “வெற்றி மேல் வெற்றியாகக் குவிக்க வேண்டும்” என்று எதிர்பார்க்கிறது.

அதுவும், மனிதர்களைத் தெய்வமாக கொண்டாடும் இந்தியா போன்ற தேசத்தில் இது வெற்றி பெற்றவர்களிடம் அதிக மன நெருக்கடியை ஏற்படுத்துகிறது.

## தோல்வி வந்தால் தற்கொலையா!

திரைஉலகை எடுத்துக்கொண்டால், ஒரு படம் உயர்தரமாக வெற்றிப்படமாக அமைந்துவிட்டது என்றால், அந்த நடிகர் தன் பெயரை நிலைநிறுத்திக் கொள்ளப் படாதபாடு படவேண்டி இருக்கிறது. "மீண்டும் வெற்றி பெற வேண்டும்" என்ற கவலை. "வெற்றி பெறாமல் போகுமோ" என்ற பயம். சில நட்சத்திரங்கள் அடுத்து சில படங்கள் தோல்வி அடைந்தால், தோல்வியைத் தாங்க முடியாமல்' தற்கொலை செய்துகொள்கிறார்கள்!

## கீழ்நோக்கி

வெற்றியின் விலை அதிகம்!

முன்னைவிட இன்னும் சிறப்பாக செய்ய வேண்டுமென்று உலகம் எதிர்பார்க்கிறது. பாலசந்தரோ, பாரதிராஜாவோ ஒரு நல்ல படத்தை எடுத்திருந்தால் கூட "இதைவிட உங்களிடம் அதிகம் எதிர்பார்த்தோம்" என்று பொதுமக்கள் பேசுவார்கள்.

அதற்கு மாறாக, தொழிலில் மிகப் பிரமாதமாக வெற்றி பெற்றவன் சிறிது காலத்தில் தோற்றுப் போனால் உலகம் அவனை கீழ்நோக்கிப் பார்க்கிறது. கம்ப்யூட்டர் தொழிலில் நேற்று பணக்காரர்களாக இருந்தவர்கள் இன்று இருப்பதில்லை. காரணம் அவ்வளவு வேகமாகப் புதிய நுட்பங்கள் அங்கே கண்டுபிடிக்கப்படுகின்றன. பழைய பெரிய கம்ப்யூட்டர் நிறுவனங்களை புதிதாக வருகிறவர்கள் தோற்கடித்து விடுகிறார்கள்.

எண்ணெய் கண்டுபிடிக்கும் தொழிலில் இப்படித்தான். நிலையானது பணம் - நிரந்தரமானது வெற்றி - என்பது இல்லை. வேகமாக சறுக்கும்.

எனவே, வெற்றி பெற்றவர்கள் தாங்கள் பெற்ற வெற்றியை முழுக்கவனத்துடன் கண்காணித்து வரவேண்டும். முதல் வெற்றி ஆணவத்தைத் தந்து விடுகிறது. ஆணவம் வரும்போது உண்மை புரிவதில்லை. தோல்வியைத் தழுவுகிறோம்.

**ஊர் உலகிற்கு பயப்படாதீர்கள்**

அடுத்து வெற்றி பெற்றவர்கள், தங்களைப்பற்றி அதிகம் எண்ணவேண்டுமே தவிர, தாங்கள் செய்யும் தொழிலில் அதிக கவனம் செலுத்த வேண்டுமே தவிர, ஊர் உலக மக்களைப் பார்த்து, அவர்களது அபிப்ராயங்களைக் கேட்டு மனம் புழுங்கக் கூடாது.

ஊர் உலகம் என்பதற்கு உருவமில்லை. அது உருவமற்ற ஒரு கூட்டம். சாய்கிற பக்கமே சாயும் செம்மறி ஆடு. நன்றி என்பதெல்லாம் அங்கே கிடையாது. எனவே நாம் ஊர் உலகம் என்ன சொல்லும் என்று ஒருநாளும் கவலைப்படக் கூடாது.

ஊர் உலகைப் பற்றிப் பயப்பட நாம் என்ன திருடினோமா, பொய் சொன்னோமா, பிறரை ஏமாற்றினோமா, வஞ்சித்தோமா? அதெல்லாமில்லை. பிறகு ஏன் நாம் பயப்பட வேண்டும்?

அடுத்து நாம் என்ன செய்யலாம் என்பது தான் நமது கவலையாக இருக்க வேண்டும். ஏனெனில் அடுத்து நாம் என்ன செய்யப்போகிறோம் என்பதுதான் நமது எதிர் காலத்தை நிச்சயிக்குமே ஒழிய ஊர் உலகம் என்ன சொல்கிறது என்பதல்ல.

திரைப்படத் துறையில் உள்ள என் நண்பர் ஒருவர், “நான் பத்திரிகையே படிப்பதில்லை. காரணம் என்ன தெரியுமா? விஷயம் தெரியாதவன் எல்லாம் என்னைப் பற்றி எழுதி இருப்பான். ஏதோ எல்லாம்

தெரிந்தவன் போல எனது படத்தையோ கதையையோ தொழில் நுட்பத்தையோ விமர்சிப்பான். அது என்னை பாதித்துவிடும். இவர்க ளெல்லாம் என்னைப் பாதிக்க ஏன் நான் அனுமதிக்க வேண்டும்? ஆகவேதான் பத்திரிக்கைகளை பார்ப்பதே இல்லை." என்பார்.

சரியான வார்த்தை!

பிறர் நம்மை பாதிக்க அனுமதிக்கிறோமா, அனுமதிப்பதில்லையா என்பது நம் கையில்தான் இருக்கிறது.

மனம் நம் மனம். அதில் எதை உள்ளே விடுகிறோம் என்பது நம் கையில்தான் இருக்கிறது!

**ஒரு தந்திரம் : வெற்றியாக பாவியுங்கள்**

இப்படிப்பட்ட தோல்விகளை சமாளிக்க ஒரு எளிய வழி இருக்கிறது.

அதுதான் விளையாட்டுப்போட்டி; விளை யாட்டுப் பந்தயம். வெகுநாள்வரை நான் சீட்டு விளையாடுவதில்லை. காரணம்: நானும் என் மனைவியும் விளையாடும்போது மனைவியே வென்று கொண்டிருந்தார்! அதுவும் தொடர்ந்து அதற்குப் பிறகும் தோற்க நான் தயாராயில்லை. "சீச்சி ... இந்தப் பழம் புளிக்கும்" என்பது போல, "சே! சீட்டு ஒரு விளையாட்டா? நான் வரவில்லை. எனக்கு வேலை இருக்கிறது" என்று டபாய்க்கத் தொடங்கினேன்.

அதன்பின் நிறையநாள் கழித்து யோசித்துப் பார்த்தேன். "கேவலம், ஒரு விளையாட்டு. அதில் தோற்பதைக்கூட என்னால் ஏற்க முடியவில்லை. விளையாட்டில் காசு பணமா நஷ்டம்? அதெல்லா மில்லை. பின் ஏன் தயக்கம்? என்னால் விளையாட்டை விளையாட்டாக எடுத்துக்கொள்ள

முடியவில்லை. விளையாட்டில் வெற்றியும் இருக்கும். தோல்வியும் இருக்கும். விளையாட்டை 'ஆ! ஓ!' என்று கூச்சல் போட்டு — சீட்டுக்கட்டை அடித்துப் போட்டு — விளையாடுவதில் என்ன ஆனந்தம்! அதை இழக்கலாமா?" என்று யோசித்தேன்.

அதன்பின் மீண்டும் சீட்டு விளையாடத் தொடங்கினேன். இப்போது தோற்றுப் போனால்கூட பலக்க சிரிக்கிறேன். செல்லமாக முஷ்டியை மடக்கி ஒரு குத்துவிடுகிறேன். வேண்டுமென்றே பொய் சொல்லி விளையாடுகிறான். பத்து முறை எதிர்கட்சி (என் மனைவி) வெற்றி பெற்றாலும் "ஏதோ இந்தமுறை வெற்றி பெற்றுவிட்டாய்! பார்! நான் அடுத்தமுறை நானே வெற்றி பெறுவேன்!" என்று வாய்ச்சவடால் விடுகிறேன். வீடே கலகலக்கிறது.

அதாவது விளையாட்டை விளையாட்டாக எடுத்துக்கொள்ள வேண்டும். வாழ்க்கையும் ஒரு விளையாட்டுதான். ஏதோ நாம் முயற்சிகள் செய்கிறோம். வெற்றியை எதிர்பார்க்கிறோம். ஆனால் சிலநேரம் தோல்வி வருகிறது. அதை விளையாட்டாக — வாழ்க்கையை விளையாட்டாக — எடுத்துக் கொள்வதில்தான் தோல்வியை வெற்றி காணும் தந்திரம் இருக்கிறது! வாழ்க்கையின் இரகசியம் அடங்கி இருக்கிறது!

**விளையாடுங்கள் !**

அதனால்தான் நான் அடிக்கடி பேரக்குழந்தை களுடனும் மற்ற குழந்தைகளுடனும் விளையாடுவதில் மகிழ்வுடன் ஈடுபடுவதுண்டு.

விளையாட்டு — விளையாட்டுப் போட்டி — விளையாட்டுப் பந்தயம் எல்லாம் நம் குழந்தைகளிடம் நல்ல மனோபாவத்தை வளர்க்கிறது.

விளையாட்டில் வெற்றி தோல்வியை அணுகும் முறை ஒரு அற்புதமான பண்பு. பூப்பந்துப் போட்டியில் அமிர்தராஜோ, ரமேஷ்கிருஷ்ணனோ தோற்றுப் போனால், என்ன செய்கிறார்கள்? சிரித்த முகத்துடன் எதிரியிடம் சென்று அவரைப் பாராட்டி கைகுலுக்குகிறார்கள்.

குழந்தைகளுக்கு, இளம் பருவத்திலேயே வெற்றி தோல்வி இயல்பு என்ற மனப்பான்மையையும், நாம் தோற்றுப்போனால், வெற்றி பெற்றவன் நம் எதிரி அல்ல என்கிற நல்ல பண்பாட்டையும் இது வளர்க்கிறது.

**தலைவர்கள்**

பொது வாழ்க்கையிலே நம் நாட்டில் இந்தப் பழக்கம் அரிதாகிவிட்டது. அறிஞர் அண்ணா எதிர்க் கட்சிக்காரர்களுடன் அன்பாகப் பழகுவார். அதே போலத்தான் பெரியாரும். ஆனால், இன்றைய அரசியலில் எதிர்க்கட்சிக்காரர்களை எதிரியாக எண்ணி அவர்களைத் "தொலைத்துவிடும்" எண்ணங்களைப் பார்க்கிறோம்.

இன்றைய அரசியல் தலைவர்களைப் பார்க்கும் போது இவர்களெல்லாம் பள்ளியில் படிக்கும்போது விளையாட்டுகளில் கலந்து கொள்ளாமல், 'டிமிக்கி' கொடுத்தவர்களோ என்றுதான் எண்ணத் தோன்றுகிறது!

நீங்கள் எப்படி?

விளையாடுங்கள்!

விளையாட்டுப் போட்டிகளில் கலந்து கொள்ளுங்கள்!

வெற்றி-தோல்வியை சமமாக எடுத்துக் கொள்ளுங்கள்!

வாழ்க்கையில் ஏற்படும் தோல்விகளையும் அப்படி எடுத்துக்கொள்ளும் மனபக்குவம் உங்களுக்கு ஏற்படும்.

அப்பொழுது தோல்வியைக் கண்டு துவள மாட்டீர்கள். அடுத்த பந்தயத்துக்குத் தயார் ஆவீர்கள். அடுத்து முயன்றால் ஆகாதது உண்டா!

## 19

# மகளே! உன் காலில் நில்!

## (பெண்களுக்கு பொருளாதார சுதந்திரம்!)

---

ஒரு முயற்சி வெற்றி பெறும்போது நமக்கு என்ன கிடைக்கிறது?

நாம் விரும்பியதை அடைகிறோம்.

நம் சாதனை – நம்மால் முடியும் என்று நிரூபிக்கிறது.

நமக்கு நம் மீதே ஒரு பெருமை ஏற்படுகிறது.

நமக்கு மனநிறைவைத் தருகிறது.

மேலே கூறிய நான்கு விளைவுகளையும் பார்த்தோமானால் கடைசியில் கூறப்பட்ட மூன்று விளைவுகளும் நம் மனதில் ஏற்படுகின்ற உணர்வுகள் என்பது புரியவரும்.

நம்மைப் பற்றி நம் மனதில் ஏற்படும் பெருமை, நம்மால் எதையும் சாதிக்க முடியும் என்ற நம்பிக்கை, நமக்குள் ஏற்படும் மனநிறைவு — இவைதான் வாழ்வை அர்த்தமுள்ளதாக்குகிறது. மேலும் சாதனை செய்யத் தூண்டுகிறது.

இப்படிப்பட்ட எண்ணங்கள் ஆணின் மனதில் அதிகம் எழுகிறதா அல்லது பெண்ணின் மனதில் அதிகம் எழுகிறதா என்று கேட்டால், அந்த வாய்ப்பு, குறிப்பாகக் கிராமங்களில் வாழும் பெண்களுக்கு அதிகம் கிடைப்பதில்லை.

சாதனைப்புரியும் வாய்ப்புகள் பொதுவாக பெண்களுக்குக் குறைவு. அதிலும் கிராமப் பெண்களுக்கு இன்னும் குறைவு. காரணம்: படிப்பின்மை. கல்வியறிவின்மை.

இன்னும் ஒரு காரணம், நமது சமூகப் பழக்க வழக்கங்கள்; கட்டுப்பாடுகள்; மரபுகள்.

**வெற்றிக்கு முதல்படி : அறிவு – படிப்பு**

ஒரு ஆணுக்குக் கொடுக்கக்கூடிய வாய்ப்புக் களை நாம் ஒரு பெண்ணுக்குக் கொடுப்பதில்லை.

“ஒரு பெண் எதற்குப் படிக்க வேண்டும்? கல்யாணம் செய்து கொண்டு கணவன் வீட்டுக்குப் போகிறவள்தானே?'' என்று ஒரு பெண்ணை திருமணத்துக்காகவே வளர்க்கிறோம்.

ஒரு ஆண் திருமணம் ஆகாமல் இருக்கலாம். ஒரு பெண் திருமணம் ஆகாமல் இருந்தால் அபவாதம். ‘கெட்ட பெயர்’. இப்படி ஒரு மரபு. மேனாடுகளில் ஆண்களைப் போல, பெண்கள் இப்போது காலந்தாழ்ந்து திருமணம் செய்துகொள்கிறார்கள்; அல்லது திருமணம் செய்து கொள்ளாமல் தனித்து வாழ்கிறார்கள்.

ஒரு பெண்ணின் முன்னேற்றத்தை தடை செய்வது படிப்பின்மைதான். படிப்பு இருந்தால்தான் ஊர் உலகம் தெரியும்; படிப்பு இருந்தால்தான் நல்ல வேலைக்குப் போக முடியும். நல்ல வேலைக்குப்

போனால்தான் நிறைய சம்பாதிக்க முடியும்; தன்னைக் காப்பாற்றிக் கொள்ள முடியும். தன் குடும்பத்தை காப்பாற்ற முடியும்.

## வெற்றி என்பது : தன் காலில் நிற்கும் பெருமை

தன் காலில் நிற்கும் பெருமை இருக்கிறதே அதை நம்நாட்டில் பெண்களுக்கு இல்லாமல் செய்துவிட்டோம். பெண்களை "சார்ந்து நிற்க வேண்டிய ஒரு சமுதாயமாக" உருவாக்கி விட்டோம்.

ஒரு பெண்ணோ ஆணோ, தன் காலில் நிற்கும்போது — தன்னால் சம்பாதித்து தன்னைக் காப்பாற்றிக்கொள்ள முடியும் என்ற நம்பிக்கை வரும்போது, அவர்களுக்கு சுதந்திரம் கிடைக்கிறது. அவர்கள் யாரையும் 'சட்டை' செய்யவேண்டிய அவசியமில்லை. அவர்களுக்கு சமூக மதிப்பு — சமூகத்தில் ஒரு பெருமை கிடைக்கிறது. வாத்தியாரம்மா, டாக்டரம்மா, வக்கீலம்மா என்று ஊரும் உலகமும் உங்களைப் பெருமையுடன் அழைப்பதைப் பாருங்கள். வேலை பார்க்கும் பெண்களுக்கும் — வீட்டிலே இருந்துகொண்டு வேலைக்கு போகாத பெண்களுக்கும் — கொடுக்கப் படும் மரியாதை வெவ்வேறானது.

சம்பாதிக்கிற மருமகளை மாமியார் அதிகம் அதட்டிக் கேட்க முடிவதில்லை; அதிகாரம் செய்வதில்லை. மாறாக மதிப்பும் மரியாதையும் கிடைக்கின்றன.

"பொட்டக் கழுதை" என்று பெண்களை இழிவுபடுத்துவதும் "பொம்பளை மாதிரி பேசறியே!" என்று பெண்களை உதாரணம் காட்டுவதும் இன்று சமுதாயத்தில் பெண்களை கேவலப்படுத்துகிறது.

"சாண் பிள்ளையானாலும் அவன் ஆண்பிள்ளை!" என்று ஆண்பிள்ளையை தலையில் தூக்கி வைத்துக் கொண்டாடுவது அவனது சகோதரியின் மண்டையில் அடிக்கிறது. "உன்னால் ஒன்றும் செய்ய முடியாது; ஏனெனில் நீ ஒரு பெண்!" என்று சொல்லாமல் சொல்கிறது, நம் சமுதாயம்.

முன்னேற விரும்பும் பெண்கள் இந்த சமுதாயப் பழக்க வழக்கங்களை கெல்லி எறிய வேண்டும். அதற்கு முதலில் பெண்கள் படிக்க வேண்டும்.

**வெற்றிக்கு தேவை : பொருளாதார சுதந்திரம்**

பொருளாதார சுதந்திரம் — அதாவது தன்னை காப்பாற்றிக்கொள்ள, ஒரு பெண் வாழ்வதற்கு தேவையான வருமானம்தான் அவளுக்கு உறுதுணை யாக என்றும் நிற்கும்.

ஆணுக்குள்ள அத்தனை திறமைகளும் ஒரு பெண்ணிடம் இருக்கின்றன. அதற்கு மேலும் இருக்கின்றன. இதை நாம் புரிந்துகொண்டு மதிப்புக் கொடுத்து நம் பெண்களை வளர்க்கத் தவறி விட்டோம். பெண்களுக்கு ஏன் பொருளாதார சுதந்திரம் வேண்டும்? இந்த உலகத்தைப் பார்த்தோ மானால் ஒருவன் படித்தவனா படிக்காதவனா என்பது முக்கியமல்ல; பணமிருந்தால் படிக்காதவன் கூட மதிக்கப்படுகிறான். மரியாதை செய்யப் படுகிறான்.

ஒருவன் பதவியில் இருக்கிறானா அல்லது பதவி ஏதும் இல்லாமல் இருக்கிறானா என்பது முக்கியமல்ல. பதவி இல்லாமல் இருந்தாலும் பணம் இருந்தால் பதவியில் உள்ளவர்களை எல்லாம்

அடிபணிய வைக்கலாம். எனவே பணம்தான் முக்கியம்.

ஒரு நபர் ஆணா பெண்ணா என்பது முக்கிய மல்ல. சொத்துக்கு வாரிசு ஒரு பெண்தான் என்னும் போது உலகமே அந்தப் பெண்ணுக்கு அடிவணங்கு வதைப் பார்க்கலாம்.

பணம் என்பது நமக்கு பாதுகாப்பைத் தருகிறது; பெருமை தருகிறது; செல்வாக்கு தருகிறது; வலிமை தருகிறது. அதனால்தான் வள்ளுவர், "மகளே! பணம் இல்லாவிட்டால் இந்த உலகில் உனக்கு வாழ்வே இல்லை'' என்று சொல்லிவிட்டுப் போயிருக்கிறார்.

## 35 வயதுக்குமேல் : வெற்றி உண்டு

பணம், சாதனை, வெற்றி என்பதெல்லாம் எதற்காக? அதன் பலன் என்ன என்ற கேள்வி வருகிறது.

மனிதன் தன் வாழ்வில் மகிழ்வுடன் மனநிறைவுடன் இருக்க விரும்புகிறான். அதுதான் வாழ்வு என்று கருதுகிறான். ஒரு ஆணைப் பார்த்து "என்ன செய்கிறீர்கள்?'' என்று கேட்கிறோம். அவர் ''சும்மாதான் இருக்கிறேன்'' என்றால், எவ்வளவு கேவலமாக அவரை மதிப்பார்கள் என்பதை எண்ணிப் பாருங்கள்.

வேலை, சம்பாத்தியம் எல்லாம் ஆண்மையின் அடையாளங்களாகக் கருதப்படுகின்றன. மாறாக ஒரு பெண்ணை யாரும், 'என்ன செய்கிறீர்கள்?' என்று நம் ஊரில் கேட்பது இல்லை. காரணம் பெண்ணுக்குக் குடும்பம், குழந்தைகள், கணவன் வீடு என்று

இருக்கிறது. அதுவே பெரிய வேலைதான். அதுவே பெரிய மனநிறைவைத் தருகிறது.

ஆனால், ஒரு 30-35 வயது பெண்மணியின் நிலை என்ன? அந்த வயதுக்கு மேலும் ஒரு 30 ஆண்டுகள் வாழக்கூடிய — வாழவேண்டிய பெண்ணின் நிலை என்ன?

கணவன் வேலைக்குப் போகிறான். குழந்தைகள் பெரியவர்களாகி படிக்கப் போகிறார்கள். ஒரு பெண்மணி தன்னிடம் எவ்வளவோ திறமை இருந்தும் அவற்றிற்கெல்லாம் எந்த வாய்ப்புமில்லாத நிலையில் வீட்டில் பொழுதைக் கழிக்கிறார்.

இத்தனை நாள் நம் சமுதாயத்தில் தொழில் — வேலை என்பது ஆணுக்கும், குடும்பம் — குழந்தை வளர்ப்பு — என்பது பெண்ணுக்குமாக என்ற ஒரு நடைமுறை இருந்து வந்தது.

இன்று உலகம் மாறி வருகிறது.

பெண்கள் படிக்கிறார்கள். அதிகம் பேர் வேலை பார்க்கிறார்கள். சம்பாதிக்கிறார்கள்; தங்கள் திறமைகளை வெளிக்கொணர்ந்து சமுதாயத்திற்கு பயன்படும் பணிகளை செய்கிறார்கள். எனவே, மாறிவரும் புதிய உலகிற்கு ஏற்பக் கிராமத்துப் பெண்களும் தங்களைத் தயார் செய்து கொள்ள வேண்டும்.

சம்பாத்தியம் குடும்பம் என்ற இரண்டிலும் பங்குபெறும்போதுதான் தன்காலில் நிற்கும் குணமும், பொருளாதார சுதந்திரமும், தன்னைப் பற்றிய நம்பிக்கையும், சார்ந்து நிற்காத குணங்களும் வளரும். இது பெண்களுக்கு நாளைய உலகிற்கு அவசியமான தேவைகள்.

வருமானம் — குடும்பம் என்பவற்றில் ஆண்-பெண்ணின் பங்கு பாதிப்பாதி என்ற விகிதத்தில் இருக்க வேண்டியதில்லை. அது அவர்கள் தேவைக் கேற்ப அமைத்துக் கொள்ளலாம். அதேபோல, வளரும் குழந்தைகள் வீட்டிலிருக்கும்போது வருமானத்திற்காக தொழிலிலோ, வேலையிலோ இறங்க வேண்டிய தில்லை. அந்தக் குடும்பக் கடமை முடியும்போது, அடுத்த கடமைக்குத் தன்னைத் தயார் செய்து கொண்டிருக்கும் பெண்தான் வாழ்க்கையைப் பயனுள்ளதாக ஆக்க முடியும்.

### பெண் குணம்

பெண்களைப் பற்றி ஆராய்ந்தவர்கள் ஆண்களைவிட பெண்கள் நம்பற்குரியவர்கள், பிறரை மன்னிப்பவர்கள், உறவில் நயம் தெரிந்து அன்பு காட்டுபவர்கள், கடின உழைப்பாளிகள் என்று எழுதுகிறார்கள்.

ஒரு ஆளை மதிக்கும் அளவுகோல் இன்று எல்லா நாடுகளிலும் பணம்தான். ஆனால் ஜப்பானியர் பணத்தைவிடக் குணத்தை அதிகமாக மதிக்கிறார்கள். அடக்கம், பணிவு, எளிமை, சமுதாயத்துடன் சேர்ந்து இணைந்து இயங்குதல்; பிறருடன் இனிமையாகப் பழகுதல் என்ற பெண் குணங்களை ஜப்பானியர் போற்றுகிறார்கள். அதற்காக அவர்களிடம் பணம் பண்ணும் — தன் காலில் நின்று தொழில் செய்யும் குணங்கள் இல்லை என்பது பொருளல்ல. இன்று பணத்தில் அமெரிக்காவை மிஞ்சும் நிலையில் ஜப்பான் இருக்கிறது.

அமெரிக்காவைப் பொதுவாகப் பார்த்தால் அங்கே ஆண் குணங்கள் அதிகம். அசாத்திய தன்னம்பிக்கை, சுதந்திரம், தன்னைப்பற்றிய பெருமை,

தனது தனித்தன்மை பற்றிய உணர்வு — இவை எல்லாம் அதிகம் அங்கே.

எந்த சமுதாயத்திற்கும் இந்த இரண்டுவகைக் குணங்களும் தேவை.

பின்னுக்கு தள்ளப்பட்டிருக்கும் பெண்கள் சமுதாயம், குறிப்பாக நம்முடைய கிராம பெண்கள் — அடுத்த நூற்றாண்டில் காலடி எடுத்து வைக்க வேண்டுமானால், அவர்களுக்கு இன்று அவசியமான ஒன்று: கல்வி. இரண்டாவது: உலக ஞானம். மூன்றாவது: தங்களால் எதையும் சாதிக்க முடியும் என்ற நம்பிக்கை.

  

# எம்.எஸ். உதயமூர்த்தி

## வாழ்க்கைக் குறிப்பு

மனவியலைப் பற்றித் தொடர்ந்து கடந்த இருபத்தி ஐந்து ஆண்டுகளுக்கு மேலாக தமிழ்ப் பத்திரிக்கைகளில் கட்டுரைகள் எழுதி வருபவர் டாக்டர் எம்.எஸ். உதயமூர்த்தி. மனோதத்துவங்களை வாழ்க்கைக்கு எப்படிப் பயன்படுத்துவது என்பதைச் சுமார் 14 நூல்களில் வடித்துத் தந்திருக்கிறார் அவர். சிறந்த ஆசிரியர் என்ற விருதும், 'புல் பிரைட்' அறிஞர் (Fulbright Scholar) என்ற கௌரவமும் இவருக்கு உண்டு.

எம்.எஸ். உதயமூர்த்தி விளநகர் என்ற கிராமத்தில், மயிலாடுதுறை தாலுக்காவில் தஞ்சை மாவட்டத்தில் பிறந்தவர். இவரின் பெற்றோர் திரு. சிங்காரம், கமலம்மாள் ஆவார். மயிலாடுதுறை உயர் நிலைப்பள்ளியில் படித்த பின் அண்ணாமலை பல்கலைக் கழகத்தில் இளநிலை பட்டப்படிப்பும், முதுநிலைப் பட்டப்படிப்பும் பெற்றார். சென்னை பல்கலைக் கழகத்தில் தனது பாடமான வேதியியலில் மற்றோர் முதுநிலைப் பட்டம் பெற்றபின் மேல் படிப்புக்கு அமெரிக்கா சென்றார்.

அமெரிக்கா செல்லுமுன் சீர்காழி இந்து உயர் நிலைப் பள்ளியிலும், குடந்தை அரசினர் கல்லூரியிலும் ஆசிரியராகப் பணியாற்றினார். பின் கிண்டி பொறியியற் கல்லூரியில் உதவி பேராசிரியராக பணி புரிந்தார்.

அமெரிக்காவில் விஸ்கான்சின் பல்கலைக் கழகத்தில் மருத்துவ ரசாயனத்தில் 'டாக்டர்' பட்டம் பெற்று ஒரு பத்தாண்டுகள் விஸ்கான்சினிலுள்ள மவுண்ட் செனாரியோ கல்லூரியிலும் மின்னே சோட்டா, ஐடகோ பல்கலைக் கழகங்களிலும் பேராசிரியராகப் பணியாற்றினார்.

பின் ஆசிரியத் துறையை விட்டு விலகி, விஸ்கான்சினில் உணவு தயாரிக்கும் நிறுவனம் ஒன்றில் அதன் தலைமை நிர்வாகியாக நாண்காண்டுகள் பணியாற்றினார். 1982-ல் (Barclay Chemicals) பார்கிளே கெமிக்கல்ஸ் என்ற ரசாயனப் பொருள்களை உற்பத்தி செய்யும் தனது சொந்த நிறுவனத்தைத் துவங்கினார். "அமெரிக்காவில் தொழில் துறையில் உள்ளவர்கள் யார் யார்" என்ற நூலில் (Directory of Who is Who in Business and Finance in the U.S.A.) அவரது பெயர் இடம் பெற்ற பெருமையும் இவருக்குண்டு. அந்நிறுவனத்தை தனது குமாரரிடம் ஒப்படைத்து விட்டு 1987-ல் நிரந்தரமாக இந்தியா வந்தார். இன்று சென்னையில் வசிக்கின்றார் அவர்.

சுய வளர்ச்சி பெற வாசகர்கள், 'எண்ணங்கள்' 'மனம், பிரார்த்தனை, மந்திரம்', 'நெஞ்சமே அஞ்சாதே நீ', 'தட்டுங்கள் திறக்கப்படும் என்ற அவரது நூல்களைப் படியுங்கள்.

சுய பொருளாதார மேம்பாடு பெற அவரது 'சிந்தனை, தொழில், செல்வம், என்ற நூலை தாரக மந்திரமாக உபயோகியுங்கள்.

சமுதாய ஈடுபாட்டின் அவசியத்தை உணர அவரது 'நாடு எங்கே செல்கிறது' என்ற நூலையும், 'நம்மால் முடியும் தம்பி, நம்பு', 'நீ தான் தம்பி

